Inaguration of T.T.D. Kalyanamandapam Mangalagiri



A view of the Kalyanamandapam






'Vanaushadi' distribution at Tirupati.





கோலச்சுரிசங்கை மாயன் செவ்வாயின் குணம் வினவும்
சீலத் தினள்தென் திருமல்லி நாடி செழுங்குழன்மேல்
மாலைத் தொடைதென் னரங்கருக் கீயு மதியுடைய
சோலைக்கிளியவள் தூயநற் பாதந்பாதந் துணைநமக்கே.

அழகியதாயச்சுரியுடையதான (ஸ்ரீரங்கநாதனது கரத்தில் உள்ள) சங்கை, பெருமானது திருவதரம் கருப்பூரத்தின் பரிமளமுடையதோ, கமலப் பூவின் பர்மள முடையதோ, தித்தித்திருக்குமோ என்று கேட்ட தன்மை வாயந்தவள். அழகிய திருமல்லி நாட்டின் முதல்வியாய், தன்னுடைய அழகிய குழற்கற்றையில் சூட்டிய கலம்பக மாலையைத் திருவரங்கனுக்கு அளிக்கும் மேன்மையுடையவளான, சோலையில் இன்பமாக வாழும் கிளி போன்ற மழலைச் சொல் வாய்ந்த ஆண்டாளுடைய தூய நல்பாதமே நமக்குத் துணையாகும்.

—தனியன்.

டிசம்பர் 1988

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரூ. 1 மலர் 19

வருடச் சந்தா ரூ. 12 இதழ் 7

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : பரமனைப் பாடிய பாவை
(சித்திரம்; கே. ஜெகதீஷ்)

2-ம் பக்கம் : (மேலே) மங்களகிரியில் (ஆந்திர மாநிலம்) புதியதாகத் திறக்கப்பட்ட தி.தி.தே திருமண மண்டபம்.
(கீழே) திருப்பதியில் வனமூலிகைகள் விநியோகிக்கப்படல்.

3-ம் பக்கம் : திருமலைக்கு மாரிஷியஸ் நாட்டு கவர்னர் -ஜெனரல் வருகை புரிந்தபோது

பின்னட்டையில் : ஸ்ரீ பிரசன்ன வேங்கடேஸ்வரசுவாமி கோவில்-அப்பாய குண்ட்டா (திருப்பதிக்கருகே)

*சிறப்பாசிரியர்.*
திரு. சி.எச். வெங்கடபதிராஜு
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர்.*
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

*அச்சிடுபவர்*
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.





# உங்களுடன் . . . .

"நானாட்டி பெதுகு நாடகமு......... புட்டுட நிஜமு, போவடயு நிஜமு, நட்ட நடிமி பணி நாடகமு"—"நாளும் வாழ்க்கை ஒரு நாடகமே ..... பிறப்பதும் இறப்பதும் உண்மை, இடையில் வாழ்க்கை நாடகமே" என்று அன்னமய்யா கூறிடும் நிலையாமைத் தத்துவம் இந்திய மண்ணிற்கோ, இந்து சமய தத்துவத்திற்கோ புதியதல்ல-இந்த அடிப்படை வாழ்க்கை உண்மையினை ஒவ்வொரு இந்துவும், தன்னைப் பலவகைகளில் பண்படுத்திக் கொள்ளும் ஒரு அறிவுரையாக ஏற்றுக் கொண்டுள்ளான். அதனால் அவன் உலகாயுத ஆசைகளை வெறுத்திடவில்லை, உடன் சன்னியாசம் ஏற்றுக்கொண்டானில்லை. ஆணாக இருந்தால் நல்ல மகனாக-கணவனாக-தந்தையாக-தலைவனாகவும்; பெண்ணாக இருந்தால்-நல்ல மகளாக-மனைவியாக-தாயாக-தலைவியாக-இறுதியில் ஒரு நல்ல மனிதனாக விளங்கவே எழுந்தன அச்சமய போதனைகள்.

ஆகவேதான் பிறப்பதை அறிந்த மனிதன் தன் மரணத்தைத் தெரிந்து கொள்ளாவிடினும், அது உறுதி என அறிந்து, தன் வாழ்க்கையில் பல நிலைகளில் பல உறவுகளில் பல கடமைகளைத் தானே ஏற்றுக் கொண்டு வாழ்க்கையை அனுபவிக்கவே செய்கின்றான். அப்போதுதான் வாழ்க்கையில் ஒரு பிடிப்பும் ஏற்படுகின்றது. பிடிப்பு இறுகும் அளவு பிரச்சனைகளும், துன்பங்களும் அதிகமாகின்றன. தளரும் அளவு வாழ்க்கை அவனுக்குப் பெருஞ் சுமையல்ல. இதுவே இம்மண்ணுக்கு இந்து சமயம் போதித்த பாடம்.

இச்சமய உண்மைக்கும் மனித வாழ்க்கைக்கும் இடையே மரணம் எனும் திரை ஒன்று என்று விழும் என்பது தான் யாருக்கும் விளங்கவில்லை. இறுதியை எதிர்பார்த்திருப்பவனின் மரணம் அவனுக்கோ, அவனைச் சார்ந்தவனுக்கோ ஓர் அதிர்ச்சி அல்ல. ஆனால் பிறந்த மண்ணின்மீது தளிர்நடை பயிலுமுன்னே அம்மண்ணுக்குள் மறைந்திடும் ஒரு குழந்தையின் மரணம் மன்னிக்க முடியாது. கனவுகளைக் கண்களில் தேக்கிக் கொண்டு நம்பிக்கையுடன் நாளை எதிர் நோக்கும் இளம் வயது மரணம் பரிதாபத்திற்குரியது. தான் பெற்றதையும், தன்னைப் பெற்றவர்களையும் பேணிப் பாதுகாக்க வேண்டிய இளம் பெற்றோர்களின் மரணம் கொடூரமானது. எல்லாவற்றிற்கும் மேலாக, ஒவ்வொரு இந்துவும் தன் வாழ் நாளில் புனித தலங்களுக்கு யாத்திரை மேற்கொள்வதை ஒரு வேண்டுதலாகவோ—விருப்பமாகவோ கொள்ளும் நிலையில், அப்புனித தலத்திலேயே எதிர்பார்க்காது தன் மரணத்தை அவன் எதிர்கொள்ளும்போது, அம்மரணம் அவனுடைய நம்பிக்கைக்கு ஒரு வெடி மருந்தாக அமைந்துவிடுகின்றது.

மேற்கூறிய இவ் அனுபவங்கள் யாவும் சில யாத்திரிகர்களுக்கு, அண்மையில் திருப்பதி அரசு பேருந்து நிலையத்தில் ஒரு பேருந்து தீ விபத்தில் ஏற்பட்டது என்ற செய்தி நம் நெஞ்சை நெகிழ்விக்கின்றது. இயற்கையின் சீற்றத்தால் ஆயிரம் பேர் மடிந்த போது, அதனை மனித சக்தியால் தடுத்திட முடியாதபோது, அதற்கு விதி என்று பெயரிட்டு, அவ்இழப்பினைக் காலத்தால் மறக்கின்றோம். ஆனால் மனிதனுடைய விபரீத போக்கால், பொறுப்பற்றச் செயலால் ஒன்றுமறியா சில பல உயிர்கள் பலியாகிடும்போது—அதுவும் தூய நெஞ்சத்தோடு தங்களைப் புனிதப்படுத்திக் கொள்ளும் நோக்கத்தோடு யாத்திரை மேற்கொண்டு அத்தலத்திலேயே பலியாகிடும் போது—மனிதப் பிறவி அந்த அளவு இழிவானதா என எண்ணத் தோன்றுகின்றது. இது விதி விளைத்திட்ட கேடு அல்ல; ஒரு மனிதனின் குறைபாட்டினால் மற்றொரு மனிதனின் உயிர் பறிக்கப்பட்டுள்ளது.

புயல் வருவது தெரிந்தும், அதன் விளைவுகளைத் தடுத்திட முடியாது என்பது அறிந்தும், மனிதன் தன்னாலான தடுப்பு மற்றும் நிவாரண முயற்சிகளைக் கையாளுகின்ற நிலையில், மனிதனால் மனிதனுக்கு ஏற்படும் தீய செயல்களையும், அதனாற்றான் எதிர்கொள்ளும் விளைவுகளையும் மனதிற்கொண்டு தகுந்த முயற்சிகளை மனிதனால் மேற்கொண்டிட முடியும்.

மற்றைய வாகனங்களைவிட பேருந்துகளையே அதிகமாக மக்கள் பயன்படுத்திடும்போது, அப்பேருந்துகளின் அமைப்பும், செயல்திறனும் மேலும் சீரானதாக அமைதல் அவசியமாகும். பேருந்துகள் இரு வழி வாசல்களைப் பெற்றிருத்தல், பேருந்துகளில் அமைக்கப்பட்டிருக்கும் 'அவசர வழி' கதவுகளைப்பற்றிய தகவல்கள் மற்றும் அவற்றை கையாளும் முறைகளை நடத்துனர் பிரயாணிகளுக்கு அறிவித்தல், மேலும் அக்கதவுகளை வெளியிருந்தும் திறக்கும்படியாக அமைத்தல், பயணச் சீட்டுகளை அளித்ததுடன் தன் பணி தீர்ந்தது என்று எண்ணாது, நடத்துனர்கள் பிரயாணிகளைத் தங்கள் பார்வையில் படுமாறு ஓட்டுநர்க்கு அருகே நடத்துனர்க்கென சுழல் அமர்க்கை ஒன்றினை அமைத்தல், பேருந்தில் ஏற்படும் அவசர மற்றும் அபாயச் செய்திகளை அருகிலுள்ள காவல் நிலையத்திற்கோ, போக்குவரத்துக் கழக அலுவலகத்திற்கோ அறிவித்திடும் வகையில் 'வாக்கி—டாக்கி' சாதனங்களை பயன்படுத்துதல் மற்றும் பேருந்து நிலையத்தில் முதற் சிகிச்சை மையம், மருந்தகம், காவல் நிலையம் ஆகியவற்றை அமைத்தல் ஆகியன யாவும் நிருவாகமும், பிரயாணிகளும் எதிர்பாராது எதிர்கொள்ளும் நெருக்கடிகளை நிச்சயமாக பெருமளவு தீர்க்கும் என்றே நம்புகிறோம்.

தெரிவிக்கப்பட்டக் கருத்துக்களும், வழங்கப்பட்ட ஆலோசனைகளும், ஒருவர் மற்றொருவருக்குக் கொடுக்கப்பட்ட அறிவுரைகள் அல்ல. ஒவ்வொரு நாளையும் மகிழ்ச்சியுடன் எதிர்பார்ப்புகளுடன் துவக்க நினைக்கும் தனி மனிதனின் அடிப்படை வாழ்க்கையின்மீது வைத்துள்ள நம்பிக்கை மற்றொரு மனிதனால் என்றும் தகர்ந்திடக்கூடாது என்பதற்காகத் தான் என்று கூறிக் கொண்டு, மேற்படி விபத்தில் உயிரிழந்த அந்நபர்களின் ஆன்மா சாந்தியடைய எல்லாம் வல்ல அவ்வேங்கடவனை வேண்டுகின்றோம்.

# செய்திச் சுருக்கம்

**கட்டண உயர்வு :**

திருப்பதி-திருமலை பேருந்து கட்டணத்தினை ரூ. 4.25 லிருந்து ரூ. 4.75 ஆக ஆந்திர மாநில போக்கு வரத்துக் கழகம் உயர்த்தியுள்ளது.

**திருமலையில்...**

22-11-88 அன்று மாரிஷியஸ் நாட்டு கவர்னர்-ஜெனரல் திரு. வீரா சாமி ரிங்கடு அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்தார். இந்திய மாரிஷியஸ் நாடுகளின் சமூக, பொருளாதார, சமய உறவினைப் பலப்படுத்தும் வகையில் அவர் தம் வருகை அமைந்திருந்தது. கோயில் மரியாதைகளுடன் கோயில் தலைமை அர்ச்சகர் திரு. ஸ்ரீநிவாசா பட்டாச்சார்யா அவர்களால் எதிர்கொள்ளப்பட்டு, பின்னர் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சி. எச். வெங்கடபதி ராஜு மற்றும் ஆந்திர மாநில அறநிலையத் துறை அமைச்சர் திரு. சிம்மாத்ரி சத்ய நாராயணா அவர்கள் உடன்வர கோயிலின் பல பகுதிகள் காண்பிக்கப் பட்டு, தி. தி. தே. மேற் கொண்டு வரும் அன்னதானம் உள்ளிட்டுப் பல திட்டங்கள் விளக்கப்பட்டன. தி. தி. தேவஸ்தானம் மற்றும் ஆந்திர மாநில அறநிலையத்துறை முயற்சியில் மாரிஷியஸ் நாட்டில் விரைவில் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் ஒன்று கட்டப்பட உள்ளது. தி. தி. தே. அக்கோயிலுக்கான இறைவர்களது திருவுருவச் சிலைகளை வழங்கும். அன்னாரின் வருகை பற்றிய புகைப்படங்கள் இவ்விதழின் 2வது உள் பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ளன.

**இலவச மூலிகை சிகிச்சை முகாம் :**

திருப்பதியில் 19-11-88 அன்று மாலை 4 மணி அளவில் திருப்பதி நகர மக்கள் நல அமைப்பின் ஆதரவில் டாக்டர் பால்ராஜ் மகரிஷி அவர்களுடைய வனௌஷ்யதி விதர்ணயக்ரும் எனும் இலவச காட்டு மூலிகை சிகிச்சை முகாம் ஒன்று இரண்டு நாட்களுக்கு நடைபெற்றது. இது சம்பந்தப்பட்ட விழாவிற்கு ஆந்திர மாநில வனத்துறை அமைச்சர் திரு. ஜி. முத்துகிருஷ்ணமநாயுடு அவர்கள் தலைமை வகிக்க, ஆந்திர மாநிலத்தின் முன்னாள் இந்திய மருத்துவ அமைச்சர் திரு. என். சந்திரபாபு நாயுடு அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்க, தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா, தி. தி. தே. செயலாட்சித் தலைவர். திரு. சி. எச். வெங்கடபதி ராஜு அவர்கள், திருவேங்கடவன் பல்கலைக் கழக துணை வேந்தர் பேராசிரியர் திரு. எஸ். வி. ஜெ. லக்ஷ்மண மற்றும் திருப்பதி ஸ்ரீ பத்மாவதி மகளிர் பல்கலைக் கழக துணை வேந்தர் திருமதி. கே. ராஜ்ய லக்ஷ்மி அவர்களும் பங்கேற்று சிறப்புரை ஆற்றினர் இம்முகாமின்போதுமூலம், ஆஸ்துமா போன்ற நோய்களுக்கான மருத்துவ ஆலோசனைகளும், மூலிகை மருந்துகளும் வழங்கப்பட்டன. (இது சம்பந்தப்பட்ட புகைப்படங்கள் முதல் உள் அட்டையில் இடம் பெற்றுள்ளன.)

**அடிக்கல் நாட்டு விழா :**

சென்னை வெங்கட்நாராயணா சாலையில் ரூ. 33 இலட்சம் செலவில் தி. தி. தே. தகவலறிவிப்பு மையம் மற்றும் விருந்தினர் விடுதி ஆகியவற்றிற்கானக் கட்டிடத்திற்கு தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்கள் அடிக்கல் நாட்டினர். 896 சுற்று மீட்டர் அளவில் கட்டப்படும் இக் கட்டிடம் நான்கு தளங்களைக் கொண்டதாக விளங்கும்.

அன்று மாலை, அண்மையில் தி. தி. தே. நடத்தியசுப்ரபாதம் மற்றும் அன்னமாச்சார்யா கீர்த்தனைகளில் சிறுர்களிடையே நடத்தப்பட்ட 41-வது வ.நடாந்திர பாட்டுப் போட்டிகளில் வெற்றிப்பெற்றவர்களுக்கு பரிசளிப்பு விழாவும் நடைபெற்றது. இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு தி. தி. தே. செயலாட்சித் தலைவர் தலைமை வகித்து உரையாற்றுகையில், இந்து தர்மத்தின் பெருமையைப் பரப்பிடும் வகையில் தி. தி. தே. தர்ம பிரசார பரிஷத் ஆதரவில் நடைபெறும் நிகழ்ச்சிகளையும், சமய நூல்களுக்கான நிதி உதவி போன்ற பல்வேறு திட்டங்களையும் விளக்கிக் கூறினர்.

பின்னர் திரு. டி. சீதாராமய்யா அவர்கள் போட்டியில் வெற்றி பெற்ற மாணவ மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கினர். பின்னர் தம்முரையில், அன்னமய்யா பாடல்களைச் சிறந்த முறையில் பாடி, அவற்றை ஒலிப் பதிவு நாடா மூலம் அனுப்பி, பின்னர் அவை போட்டி முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு அவற்றிற்கு நிதி உதவியோ, பரிசுகளோவழங்கும்வகையில் திட்டம் ஒன்று செயற்படுத்தப்படும் என்று கூறினர். இறுதியாக, உள்ளூர் ஆலோசனைக் குழுவின் தலைவர் திரு. சோமயாஜுலு அவர்கள் நன்றி நவின்றார்.

அன்று மாலை, தி. தி. தே. அன்னமாச்சார்யா பாடற் குழுவின் சார்பாக திரு. ஜி. பாலகிருஷ்ண பிரஸாத் அவர்களின் இன்னிசைக் கச்சேரி ஒன்று நடைபெற்றது.

**புஷ்ப யாகம் :**

16-11-88 அன்று திருமலையில் நடைபெற்ற புஷ்ப யாக நிகழ்ச்சியில் தலா ரூ. 3,500 செலுத்தி 46 நபர்கள் கலந்து கொண்டனர். 175 பூங்கொத்துக்களால் யாக மண்டபம் அலங்கரிக்கப்பட்டது. அன்று மாலை திருமலையில் உற்சவமூர்த்திகளின் திருவீதி திருவுலா நடைபெற்றது.





புகைப்படம் : ஜி. உமா - திருப்பதி.

# கீதாச்சார்யன்

ஆண்டவன் சந்நிதியில் பக்தன் தன் மேல்உத்தரீயத்தோடு நிற்க மாட்டான். மேல்உத்தரீயத்தை இடையிலே கட்டிப் பின் கைகட்டி வாய் பொத்தி நிற்பான். பெரிய பெரிய ஆண்டை முன்னே அடிமையும், நிலக்கிழார் முன்னே பண்ணையாளும் அங்ஙனமே நிற்பர்.

இப்பழக்கம் இன்று நேற்று ஏற்பட்டதல்ல. பன்னெடுங் காலமாகவே இது நின்று நிலவி வருகிறது.

மகாபாரத காலத்திலே, தன்னோடொத்த அரசன் தன்னிடம் சூதாடி நாடிழந்து, தன்னையும் தன் தம்பியர்களையும் தம் தாரத்தையும் தோற்று நின்றபோது தோற்றதால் தனக்கு அவர்கள் அடிமையான பின்னர் இந்த வழக்கத்தை-அடிமைகள் உத்தரீயத்தைத் தம் மார்பிலே அணிதலாகாது என்ற வழக்கத்தை-உடனே நிறைவேற்ற-அமுல்படுத்த - துரியோதனன் உத்தரவு பிறப்பித்ததனால் ஏற்பட்டதே பாஞ்சாலி சபதமும் பாரதப் போரும் என்பது நமக்குத் தெரியும்.

மார்பிலே துணியைத் தாங்கும்
வழக்கம்கீழ் அடியார்க்கில்லை
சீரிய மகளும் அல்லள்
ஐவரைக் கலந்ததேவி
யாரடா பணியாள் வாராய்
பாண்டவர் மார்பிலேந்தும்
சீரையும் களைவாய் தையல்
சேலையும் களையாய் என்றான்

என்று மகாகவி பாரதியார் இவ் வழக்கத்தை விளக்கிக் காட்டி நம் கண் முன்னே சித்தரிக்கிறார்.

தமிழிலே மகா பாரதத்தை நமக்கு வடித்துத் தந்த வில்லிபுத்தூர் ஆழ்வார் அவர்கள் நமக்குப் படம் பிடித்துக் காட்டும் காட்சி இது.

மன்னன் துரியோதனன், தன் தம்பி துர்ச்சாசனனை நோக்கி,

"மன்னவையின் எதிரே இம்மானமிலா
ஐவரையும் வழக்கு வார்த்தை
சொன்ன கிளி மொழியினையும்
துகிலுரிதிஎனஉருமிச் சொன்னான்"

என்று கட்டளை இடுகிறான். இதைக் கேட்ட துர்சாசனன், தமக்கென இருந்த யாவையும் தோற்று, தம்மையும் தோற்று, தம் மனைவியையும் தோற்று அடிமைப்பட்டுள்ள ஐவர் முன்னே வந்து நிற்கிறான். ஆனால் அவன் அவர்களிடம் கேட்கா முன்னமே,

தருகதுகில் என எழுந்து தங்களை
வன்போடு
துச்சாசனன் சொலாமுன்,
வருகவென வரைமார்பின் வாங்காத
உத்தரியம் வாங்கி ஈந்தார்.

ஆமாம். இதுவரை எக்காரணத்திற்காகவும் வாங்கப்படாத தமது உத்தரீயங்களை எடுத்து-வாங்கி அவனிடம் கொடுத்துவிட்டார்கள். அதாவது தாம் அங்கு அடிமையரே என்பதை உணர்த்தும் பொருட்டு தமது உத்தரியங்களை அவனிடம் கொடுத்து விட்டனர்.

ஆனால் அந்த ஐவரின் தேவியோ தன்னுடைய மேலாடையைத் தானே கொடுக்கவும் இல்லை அதைப் பிறர் பறிக்க அனுமதிக்கவும் இல்லை. எப் பெண்தான் அதற்குச் சம்மதிப்பாள்.

அது மட்டுமா பாஞ்சாலிக்கு. இது, ஒரு மானப் பிரச்சனை, உரிமைப்பிரச்சனை, கௌரவப் பிரச்சனை. தான் ஒரு அடிமைச்சி அல்லள் என்பது அவள் வாதம்

"மன்னவையில்முன் தோற்றனனோ?
என்னையும் தான்
முன்னே இசைந்துதனைத் தோற்ற
பின் தோற்றனனோ?"

என அரசியல் நூல்வல்ல அறிஞர் பெரு மக்கள் முன்னே கேள்வி கேட்டு

திரு நலங்கிள்ளி
அரக்கோணம்.

அயர வைத்தவள் பாஞ்சாலி. பெண்ணரசி கேட்கின்ருள் பெண்மை வாயால் என்கிருர் பாரதி.

இதற்கு அங்கிருந்த மூதறிஞர் பெரு மக்கள் ஒருவரும் பதில் சொல்லவில்லை. அதற்கொன்றும் சொல்லாமல் ஊமைகள் போல் வீற்றிருந்தார்.

துரியோதனனுடன் பிறந்த கடைக்குட்டியாம் விகர்ணன் எனும் 'வாய்மைக் கடவுள்' மட்டுமே தன் தீர்ப்பை தைரியமாக வழங்குகின்ருன்.

"தனதென்று உணரத் தக்கவெலாம்
முன்னே தோற்று தங்களேயும்
முறையே தோற்று முடிவுற்ருன்
சொன்னேர் உரைக்குத் தான் பிறர்க்
குத் தொண்டாய்விட்டு கரிகுழலே
பின்னே தோற்க உரிமை இலே"

என்று திட்டமாகக் கூறிவிட்டான் அவன்.

எனவேதான் பாஞ்சாலி தன்னுடைய துகிலைத் தர மறுக்கிருள். மறுப்பதின்மூலம் தான் அடிமைச்சி அல்லள் என நிலைநாட்ட முற்படுகிருள்.

ஆனுல் பண பலமும் படை பலமும் அதிகார பலமும் ஆணவமும் மிருக பலமும் மிகுந்திருக்கும் துரியோதனுதியர்கள்முன் ஓர் அபலேயின் நீதி கேட்கும் அவலக் குரல் எடுபடவில்லை.

தருமத்தின் வாழ்வதனேச் சூது கவ்வும் என்று பாரதி சொன்னபடி தருமத்தின் மேலாடையை சூதுமதியன் துர்ச்சாசனன் துகில் உரியத் தொடங்கினுன்.

"அருகணுகி மடவரலே அஞ்சாமல் துகில்
உரிவான் அடுத்த போதில்
இருகை நறுமலர் குவியஎம்பெரு
மான் இணையமக்கே இதயம்
வைத்தாள்".

பாஞ்சாலி யாவராலும் கைவிடப்பட்டாள். கணவன்மார்கள், சுற்றத்தினர், நீதி நூல்வல்லார் யாவரும் கைவிட்டனர். பின் தனக்குத் தன் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள யாதொரு வழியும் புலப்படவில்லை. திக்கற்ற தன் நிலையை நினைத்தாள். கண்களிலே நீர் திரண்டது. பின் அது ஆருகிப் பெருகிப் பாய்ந்தது. தன் மேலாடையைக் களையாதபடித் தன் இரு கைகளாலும் இதுவரை இறுகிப் பிடித்திருந்த கைகளும் சோர்ந்தன; அவள் மெய்யும் சோர்ந்துவிட்டது.

காப்பாற்றக் கூடியவர்கள் காப்பாற்ற வேண்டியவர்கள் தன்னைக் காக்கவில்லையே என ஆதங்கம் அவளுள் எழவில்லை. யார்மீதும் கோபமில்லை, வெறுப்பில்லை. ஒரே சிந்தனை தான். காக்க வேண்டியவன் தன் மானத்தைக் கட்டாயம் காப்பான். காக்க அவன் கடமைப்பட்டவன்.

இப்படி நினைத்த மாத்திரத்தே, அவள் நெஞ்சத்தின் அடி ஆழத்திருந்து, ஒரு குரல் ஓங்கி ஒலித்தது. அதுதான் அபயக்குரல். அச்சொல் தான் ஒப்பற்ற கோவிந்த நாமம் இத்தாரக மந்திரமாம் சொல்லையே-நாமத்தையே அவள் அடுத்தடுத்துக் கூவி அழுது அரற்றினுள்.

பயத்தாலோ, கோபத்தாலோ, ஆற்ருமையாலோ பீடிக்கப்படும் மனிதனுடைய நாவும் உதடுகளும் வரண்டுவிடும். வாயிலே ஈரப்பசையே இராது.

இங்கே திரௌபதியைப் பலர் முன்னிலையிலே துகில் உரியத் தொடங்கியக்கால் அத்தேவிக்கு ஏற்பட்ட உளச்சோர்வு, உடற்சோர்வு, வாய் நா உலர்தல் முதலிய யாவும் அவள் எழுப்பிய அபயக் குரலாம் கோவிந்தா எனும் சொல்லை அடுத்தடுத்து உச்சரித்துக் கூவியதால் நாக்கு வரட்சி நீங்கி குளிர்ந்தது. அது மட்டுமா அந்நாவிலே ஊறுதற்கு அருமையான அமிர்தமன்ருே ஊற்றெடுத்து நா, உதடு, வாய் அண்ணம் யாவுமே தீஞ்சுவைத்தாகிவிட்டது.

ஆம். இப்படித் தன் நாவாலே, ஓயாமல் கோவிந்தா கோவிந்தா என்று அரற்றிய அதனுல் அவள் தன் உடல் சோர்வனைத்தும் நீங்கப் பெற்ருள்; உடல் புளங்காங்கிதமடையப் பெற்ருள். உள்ளம் எலாம் உருகி நின்ருள்.

ஆருகி இருதடங்கண் அஞ்சனவெம்
புனல்சோர அளகஞ்சோர
வேருகி துகில்தகைந்த கைசோர
மெய்சோர வேருேர் சொல்லும்
கூருமல் கோவிந்தா கோவிந்தா
என்றரற்றிக் குளிந்து நாவில்
ஊறுத அமிர்தூற உடல்புளகித்து
உள்ளமெலாம் உருகினுளே.

இதைக் கேட்டான் கோவிந்தன். கேட்டவன் எப்படிப் பட்டவன். அருமறை சொல்லிய நாமம் ஆயிரமும் (சகஸ்ரநாமம்) உரைத் தழைக்க, அமரர் போற்றும் திருமலர்ச் செஞ்சீரடியோன்-கரியமுகில் அனையவனுகிய கண்ணன். இந்த அபயக் குரல் தன் செவிக்கு எட்டியவுடனே அவன், பிறர் எவர்க்கும் தெரியாமல் அவட்குக் கருணை செய்தான். திரௌபதியின் மானம் காப்பாற்றப்பட்டது.

அன்று திரௌபதி கடைப்பிடித்த அதுதான் பிரபத்தி.

இறைவன் வல்லமையிலும் அருளிலும் பூரண நம்பிக்கை வைத்துத் தன்னை முழுக்க-முற்ற அவனிடம் ஒப்படைத்தலே பிரபத்தி. இதுவே சரணுகதி தத்துவம்.

பாண்டவர்கள் வனவாசம் முடிந்தது. கரந்துறைதலும் முடிந்தது. வாசுதேவனைத் தூதனுப்பித் தம் நாட்டைத் திருப்பிக் கேட்க ஆலோசித்தனர், பாண்டவர்கள்.

துரியோதனனிடம் தூது போதலே சிறந்தது என்று, தன் தம்பியர் சொற்களையும் மறுத்துத் தருமராசன் வலியுறுத்தினுன். ஆனுல் பாஞ்சாலி கண்ணபிரானை நோக்கி,

கற்றைக் குழல் பிடித்து கண்ணிலான்
பெற்றெடுத்தோன்
பற்றித் துயிலுரியப் பாண்டவரும்
பார்த்திருந்தார்
கொற்றைத் தனித்திகிரி கோவிந்தா
நீயன்றி



திருப்புறம்பயம் கோயில்.
திரு. டி. சீனுவாசன் - சென்னை.

அற்றைக்கும் என்மானம் ஆர்வேறு
காத்தாரே.

என்று அழுது புலம்பினாள். அன்று வீரத்தோடு சபதம் செய்து விரித்த என் அருங்கூந்தலை, இவர்கள் இவ் விதமாக நின்னைத் தூதனுப்பி நாடு பெற்று நாணமின்றி ஆள முற்பட்டல், நான் எப்படித்தான் எக்காலத்தில் என் விரித்த கூந்தலை முடிப்பது என்று கண்ணன் முன், வரி மலர்க்கண் புனல சோர, மலர் மறந்த குழல் சோர, விரைமலர் செஞ்சேவடிக்கீழ் வீழ்ந்து அழுதாள்.

இவை கேட்ட கண்ணபிரான் திருச்செவிகளிலே, அற்றைக்கும் என் மானம் ஆர்வேறு காத்தாரே எனும் சொல் ரீங்காரம் செய்தது. 'அன்று என் மானத்தைக் காத்தவனும் நீ தான், இனி என் மானத்தைக் காத்து சபதத்தை முடிக்க வைப்போனும் நீ தான்' என்பதைத் திரௌபதி, சொல்லாமல் சொல்லிக் குறையிரந்தாள்.

கிருஷ்ண பகவான், திரௌபதியைத் தேற்றித் தன் அருள் ஒழுகு சொற்களால் பதிலளிக்கிறார்.

"தொல்லாண்மைப் பாண்டவர்க்குத்
தூது போய் மீண்டதற்பின்
நல்லாய் உன் பைங்கூந்தல் நானே
முடிக்கின்றேன்
எல்லாரும் காண இனிவிரிப்ப
தெண்ணரிய
புல்லார்தம் அந்தப் புரமாதர்
குழலே."

என்ற பதிலால் அவளைத் தேற்றித் தம் கடமை யாற்ற தூது செல்கின்றார் பரந்தாமன்.

திருவல்லிக்கேணியிலே எழுந்தருளியுள்ள, பார்த்த சாரதிப் பெருமாள் சந்நிதி முன்னே நின்று இறைவனைக் கண்டு தொழுது பாசுரம் பாடிய, மங்களாசாசனம் செய்த திருமங்கை மன்னருக்கு, இந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் தம் மனக்கண்முன் வந்து நிழலாடின.

பேர் படைத்த விசயனுடன் மும்மை நெடும் பிறவியிலும் பிரியாதவன், அவனுடைய சீர்மைமிக்க கேண்மையினால் அவனுக்குத் தேர் ஊர்தற்கு இசைந்தவன். அதற்கு முன்னே படைத்துணைக்குத் தன்னை அழைத்த போது, துரியோதனனிடம், தான் பாண்டவர் பக்கலிருந்தாலும், தன் கையால் படைதொடேன் என்று வாக்களித்தவன். அப்படிப்பட்ட, செங்கண்மால்-பார்த்த சாரதியை தரிசிக்கிறார் திருமங்கை ஆழ்வார்.

ஆங்கு அவருக்குக் காட்சி தந்தவர் இந்திரன் சிறுவன் தேர்முன் நின்றவனாகிய பார்த்த சாரதிப் பெருமான். தேரிலே ஊர்ந்து செல்பவன் இந்திரன், சிறுவன் பார்த்தன், ஒட்டிச் செல்பவனோ திரிவிக்ரமனாகி ஓரடியால் உலகத்தையே அளந்த நெடியோன். ஆழ்வார்பாசுரப்படி,

"முனிவன் மூர்த்தி மூவராகி வேதம்
விரித்துரைத்த
புனிதன் பூவை வண்ணன் அண்ணல்
புண்ணியன் விண்ணவர்கோன்
தனியன் சேயன் தானொருவனாகிலும்
தன்னடியார்க்கு
இனியன் எந்தை எம்பெருமான்."
—ஆனவன்.

அஃதாவது, அவனே அகில உலகத்தையும் சிருட்டிக்கச் சங்கல்பம் செய்தவன். மூர்த்திகள் மூவராகி நிற்பவனும் வேதங்களை விரித்துரைத்த புனிதனும் காயாம்பூ போன்ற நிறத்தை உடையனும் அவனே. யாவருக்கும் அண்ணலாயும், புண்ணியத்தின் வடிவாயும், விண்ணோர்கள் தலைவனாயும், ஒப்பற்றவனாயும் பிறர்க்கு எட்டவொண்ணாதவனும் ஆகிய எம்பெருமான் தன்னையே நாளும் வணங்கித் தொழும் அடியவர்க்கு எளிமையான இனியவனாய் இருக்கின்றான். அதனாலேயே அவ்வளவு மகத்தானவன் இவ்வளவு எளிய தேர்ச் சாரத்தியம் செய்யத் தன்னை ஈடுபடுத்திக்கொள்ளுகிறான். ஏன்?

ஆழ்வார் அதற்கு பதில் சொல்கிறார்:

"அந்தகன் சிறுவன் அரசர்தம் அரசற்கு
இளையவன் அணியிழையைச் சென்று,
எந்தமக்குரிமை செய்யெனத் தரியாது
எம்பெருமான் அருள்என்ன,
சந்தமல் குழலாள் அலக்கண் நூற்றுவர்தம் பெண்டிருமெய்தி நூலிழப்ப,
இந்திரன் சிறுவன் தேர்முன் நின்
றானை, திருவல்லிக்கேணிக்கண்டேனே"

அந்தகனுக்கு - குருடனுக்கு-மைந்தனுகப் பிறந்தவன் துரியோதனன். அதனுல் அவனை அந்தகன் சிறுவன் என்கிருர் ஆழ்வார். அவன் அந்தகனுக்கு மைந்தன் மட்டுமல்ல. அவனே அந்தகன். குருடனுகிய, அந்தகனுகிய சிறுவன் என்றும் அதற்குப் பொருள் உரைக்கலாம். தகப்பன் கண் குருடன், இவனே கருத்துக் குருடன். இவன் தம்பி துர்ச்சாசனன், திரௌபதியிடம் சென்று எங்கட்கு அடிமை செய்யென்று கூந்தலைப் பிடித்திழுத்து துகில் உரிந்து மானபங்கம் செய்தக் காலை எம்பெருமானே அருள் செய்திடுவாய் என்று பிரார்த்தனை செய்ய, திரௌபதியடைந்த வேதனை கலந்த துன்பம் துரியோதனுதியர் நூறு பேர்களின் மனைவியரும் அடைந்து மங்கல நூலிழந்து தம் முடித்த கூந்தலை விரிக்கும்படியாகச் செய்ய, இந்திரன் சிறுவன்-பார்த்தன்-தேர்முன் நின்றவனுகிய எம்பெருமானைத் திருவல்லிக்கேணியில் தரிசித்தேன் என்கிருர் ஆழ்வார்.

'தூது போய் மீண்டதற்பின் நல்லாய் உன் பைங்கூந்தல் நானே முடிக்கின்றேன்' என்று தான் கொடுத்த வாக்கைக் காக்க ட்டுமா கண்ணன்-கிருஷ்ண பரமாத்மா - பார்த்தன் தேர்ச்சாரதி ஆனுன்.?

அல்லது,

"நீ பாரத அமரில் யாவரையும் நீராக்கி
பூபாரம் தீர்க்கப் புரிந்தாய் புயல் வண்ணு"

எனப் பாண்டவருள் இளையவன் சகாதேவன் சொன்னபடி பூபாரம் தீர்க்க மட்டுமே கோவிந்தன், பார்த்தசாரதியாகத் தன்னை ஈடுபடுத்திக் கொண்டானு?

இல்லை! இல்லை! மேற்சொன்ன காரணங்கட்கு மேம்பட்ட மற்றொன்று உண்டு.

அதுதான் இனிவரும் மக்கட் சமுதாயம் உய்ய வேண்டும், தாம் யாரென உணர வேண்டும். தம்மையறிந்து இன்பமுற வேண்டும், மானுட ஜாதி அறத்தையே கடை பிடித்து, நிஷ்காம்ய கர்மத்தால் மேம்பட வேண்டும் என்னும் கருணையினுல் பகவத் கீதை எனும் ஆரா அமுதை கீதாசாரியனுய் நின்று உலகுக்கு அளித்து மானுட தர்மத்தை விளக்கமாக உணர்த்திய பேரருள் தன்மையேதான் ஆகும்.



திரிவிக்ரமன் - மூலவரும், உத்சவரும் - திருக்கோயிலூர்
திரு. எம். ராஜகோபாலன் - சென்னை.



# நான் கண்ட இந்து மதம்

முன்னுரை :

மதம் என்பது மார்க்கமாகக் கொள்ளப்படும். மார்க்கம் என்பது வழியாகும். இறைவனை அடைகின்ற மார்க்கம் மதமாகும். இறைவனை அடைவது எப்படி என்பதை மதக் கொள்கைகள் நமக்கு நன்கு விளக்குவனவாய் உள்ளன. நதியானது மலையிலிருந்து உற்பத்தியாகி, காட்டிலுள்ள மேடு பள்ளங்களிலெல்லாம் விழுந்து பின்பு சமவெளியில் பாய்ந்து வளத்தைக் கொடுத்துக் கடைசியாக கடலில் இரண்டறக் கலந்து விடுகின்றன. அதுபோல நாமும் கடமைக்காகப் பிறந்து பல அரிய பெரிய சோதனைகளுக்கெல்லாம் ஆளாகி மதமென்னும் மாண்பினைத் தெரிந்து நல்லன பல செய்து கடைசியில் இவ்வுலகக் கடன் முடித்து இறைவனடி சேர்கிறோம். இவ்வுலக மக்கள் அனைவரும் இறைவனடி சேர்வது சாத்தியமா? இல்லை. இறைவன் விரும்புவனவற்றை இவ்வுலக சமுதாயத்திற்கு பலன் கருதாது செய்தோமேயானால் இவ்வுலகில் நம்முடைய கடன் முடிந்து விட்டதாக இறைவன் நம்மை அங்கீகரிப்பார். இல்லையேல் மீண்டும், மீண்டும் மானிடர்களாகப் பிறந்து கொண்டேயிருக்க வேண்டியதுதான். நம்முடைய கடமைகளைக் கொள்கை வடிவில் எடுத்துக் கூறுவதுதான் மதம்.

இந்து என்ற பதத்திற்கு அறம் என்பது பொருள். ஆகவே அறத்தை அடிப்படையாகக் கொண்டதே இந்து மதமாகும். இந்து மதத்தினரிடையே உண்மை, நேர்மை, வாய்மை, நல்லொழுக்கம், கீழ்ப்படிதல் போன்ற குணதிசயங்கள் மிகுந்தே காணப்படுகின்றன. இந்துக்கள் எப்போதும் சாத்விக சுபாவிகளாகவே காணப்படுகிறார்கள். புகழ்ச்சி என்பதும், மட்டற்ற மகிழ்ச்சி என்பதும் மறுக்கப்படுகின்றன. நிதானமாக செயல்பட்டு சமாதானத்தைக் கடைபிடிக்கிறார்கள். பொறுமையும், புறங்கூறுதலும் அவர்களிடமிருந்து பறந்தோடுகின்றன. அபிலாசைகளை அடியோடு ஒழிக்கிறார்கள். தான் என்ற அகந்தையை விட்டு நாம் என்னும் பொதுப் பொருளை படைக்கிறார்கள். எளிமையாகவும், தூய்மையாகவும் வாழ்கிறார்கள். வீண் வம்புகளை விடுத்து பொறுமையைக் கைக்கொள்கிறார்கள்.

என்னுரை :

இன்றைய தினம் பிற மதத்தினரும் இந்து மதக் கொள்கைகளைப் படிக்கின்ற-படித்து பயன்பெறுகின்ற அளவிற்கு இந்து சமயப் பெரியோர்களின் தத்துவங்கள், தத்துவார்த்த ஞானங்கள் புகலிடங்களாக மாறுகின்றன. முந்தைய நாட்களில் பிற மதத்தைச் சேர்ந்தவர்கள் இந்துக்களைத் தாழ்த்திக்கூறி தங்கள் மதத்தை மதத்தைப் பரப்பும் வழிகளில் ஈடுபட்டனர். இந்து மதத்தில் கொள்கைகளோ, தத்துவங்களோ இல்லையென்று பறை சாற்றினர். தங்களின் மதம்தான் உண்மையான மதமென இறுமாப்பு எய்தினர். ஆனால் உண்மை நிலை என்னவென்று நாம் அறுதியிட்டு பார்ப்போமேயானால் உலகிலுள்ள மதங்கள் யாவற்றிலும் பிரம்ம ஞானத்தை கடைபிடித்தொழுகும் இந்து மதமே தலை சிறந்த மதம் என்பது நமக்கு நனி விளங்கும். இதையே சுவாமி விவேகானந்தர் அவர்களும் உலக மக்களுக்கும் உணர்த்தியுள்ளார்கள். இன்றும் பிற மதத்தின் ஒரு சாரார் இந்து மதக் கொள்கைகள் பிற மதத்தின் கொள்கைகளை அடியொற்றி எழுதப்பட்டவை என்று இடி முழக்கம் செய்கிறார்கள். இந்து மதக் கொள்கைகளை பாமர மக்களிடம் திணித்து மதத்தை வளர்க்க வேண்டுமென்கின்ற அவசியம் இந்து மதத்திற்கோ, இந்துக்களுக்கோ இல்லை என்பது வெட்ட வெளிச்சமே. வெளி நாட்டு உதவியால் நம் இந்து மதம் வளர வேண்டிய அவசியமும் இல்லை. புராதன வளர்ச்சி பெற்ற இப்புண்ணிய பூமியாகிய பாரதத்திலே தோன்றிய மதம் இம்மண்ணிலே வேரூன்றி தழைத்து வளர்ந்து கொண்டேயிருக்கிறது என்றால் அது மிகையாகாது. எத்தனையோ மதங்கள் ஊன்ற வழியின்றி வகையறியாது வீழ்ச்சியுறும் இந்நாளில் மக்களிடத்தில் கண்டிப்புடனும், பிடிவாதத்துடனும் பரப்பாமல் இருக்கின்ற இந்து மதம் இலை முளைத்து இளந்தளிர் விட்டுச் செழித்தோங்கி வளர்கிறது என்பது உள்ளங்கை நெல்லிக்கனியன்றோ?

இந்து மதம் பல சிக்கல்கள், சோதனைகளுக்குட்பட்ட பின்னர் சம்மட்டியால் அடித்து புடமிடப்பட்ட தங்கத்தைப் போல் ஒளி வீசிக் கொண்டேயிருக்கிறது. இந்து மதத்தை மக்களிடம் திணிக்கப்படுவதோ, கட்டாயப்படுத்தப்படுவதோ கிடையாது. செல்வத்தை அள்ளிக் கொடுத்துப் பரப்பி வளர்க்கப்பட வேண்டுமென்கின்ற தேவை இல்லை. தெரிந்து கொள்ளப்பட்டவர்கள், அறிந்து கொள்ளப்பட்டவர்கள் மத கொள்கைகளை கடைபிடித்து ஒழுகுவதே மதத்திற்கு சாலச் சிறந்த

திரு. இரா. சதாசிவன்,
சென்னை-6.

தெம்பை ஊட்டுவதாய் அமையும். புராணங்களும், இதிகாசங்களும் மக்களுக்கு கதை வடிவாய் மதத்தை விளங்க வைக்கின்றன. தத்துவ ஞானங்களோ இந்துக்களை தத்துவ பாதைக்கு இட்டுச் செல்கின்ற நிலைக் களன்களாக விளங்குகின்றன. பிற மதத்தினர் இந்துக்கள் விக்கிரகங்களை வழிபடுவதாகக் குறைபட்டுக் கொள் கின்றனர். பக்தியும், நம்பிக்கையும் மதத்தின் இருபெரும்மூலதனங்களாக இருக்கின்ற காரணத்தினுல் இந்துக் கள் பக்தியோடும், நம்பிக்கையோடும் விக்கிரக வழிபாடு செய்கிருர்கள். இந்து மதம் சமுதாயத்தோடு பின்னி பிணைந்து இருக்கின்றமையால் சமுதாய மக்களை இந்துக்கள் மதிப்பாக வும், மரியாதையாகவும் நடத்துகிருர் கள். இந்து மதம் தத்துவங்களின் புகலிடமாக விளங்குவதால் இந்துக் கள் பிற மதத்தினரை பரிகாசம் செய்யவோ, குறை கூறவோ, பழிக் கவோ தங்களைத் தூண்டுகோலாக்கிக் கொள்ளாமல் மாருக அவர்களிடம் அன்பாகவே இருக்கிருர்கள். 'ஒன்றே குலம் ஒருவனேதேவன்' 'அன்பேசிவம்' என்னும் திருமூலரின் வாக்குப் படி இந்துக்கள் செயல்படுகிருர்கள்.

இந்துக்கள் ஒற்றுமையாகக்கட்டுக் கோப்பாக வாழ்ந்து வந்த போதும் பிற மதத்தினரின் தூண்டுதலின் பேரால் களங்கங்கள் விளைவிக்கப்பட் டுள்ளதையும், வெளி நாட்டார் நம் நாட்டின்மீது படையெடுத்து சிற்சில இடங்களில் அதிகாரத்தை கைப்பற்றி அவர்தம் மதத்தை பரப்பியதும் நாமறிவோம். பரந்து விரிந்த வேற் றுமையில் ஒற்றுமையைக் காணும் உபகண்டமாகிய நம்முடைய இந்திய நாடு பிரிவினைக்கு ஆளாக்கப்பட்ட தும் நாமறிவோம். எவ்வளவோ சொல்லொணு சிரமங்களையும், தொல்லைகளையும் அனுபவிக்கின்ற அவல நிலையை அடைந்த போதும் நம்முடைய இந்து மதம் அதன் நிலையிலேநிலை பிறழாது பாருக்கெல்லாம் வழிகாட்டியாக விளங்கியது மறுக்க முடியாது.

இந்து சமயத்தின் தொன்மையும், பழமையும் :

நம் நாட்டுப் புதைபொருள் ஆராய்ச்சியாளர்களால் ஆராய்ச்சி செய்து மண்ணுக்கடியிலிருந்து கண் டெடுக்கப்பட்ட புதையுண்ட நகரங் களாகிய மொகஞ்சதாரோ, ஹரப்பா நம் நாட்டின் கலாசாரச் சின்னங் களாக விளங்குகின்றன. புதை பொருள் ஆராய்ச்சியாளர்களால் கணிக்கப்பட்ட இற்றைக்குச் சுமார் ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் சிந்து சமவெளிக் கரையில் பண்பட்ட சிந்து சமவெளி நாகரிகம் இருந்த தெனவும், சிந்து சமவெளி மக்கள் பண்பாடோடும், கலாச்சாரத்தோடும் மொகஞ்சதாரோ, ஹராப்பா ஆகிய நகரங்களில் வாழ்ந்து வந்தார்களென வும் அறிகிறோம். புதையுண்ட நகரங் களைத்தோண்டும்போது சிவலிங்கமும், சக்தியின் சிலையும் கண்டெடுக்கப்பட் டன. சுமார் ஐந்தாயிரம் ஆண்டு களுக்கு முன்னரே சிந்து சமவெளி மக்கள் சிவனையும், சக்தியையும் தங் களின் தெய்வங்களாக வழிபட்டனர் என்பது இதிலிருந்து தெள்ளத்தெளி வாகப் புலனுகின்றது.

நம்முடைய நாட்டின் முதல் பிர தான சரித்திரத்திலிருந்தே இந்திய மக்கள் இந்து மதத்தை பின்பற்றி யுள்ளார்கள். உலக நாகரிகங்களி லெல்லாம் மூத்த முதல் நாகரிகமே சிந்து சமவெளி நாகரிகம்தான். நம் முடைய சிந்துசமவெளி நாகரிகத்தை அடியொற்றித்தான் மற்ற எல்லா விதமான நாகரிகங்களும் தோன்றி வளர்ந்தன. இருப்பினும் பண்டைய நாகரிகங்களில் பண்பட்ட நாகரிக மாக விளங்கியது சிந்து சமவெளி நாகரிகமென்றுல் அது மிகையாகாது. காரணம் சிந்து சமவெளி மக்கள் மாலவனையும் சிவனையும், சக்தியையும் தங்களின் தெய்வமாக வழிபட்டதே யாகும்.

புராணங்களும், இதிகாசங்களும் தோன்றிய காலம் அறுதியிட்டு உறுதி யோடு கூறக்கூடிய வரம்புகளை மீறி யது. குறிப்பாக நம் நாட்டிலுள்ள இந்து ஆலயங்களில் காணப்படும் கல் வெட்டுக்களே நம் நாட்டின் பழமை யையும், பெருமையையும் நமக்கு நன்கு விளக்குவனவாய் விளங்கு கின்றன.

இந்து மதம் மும்மூர்த்திகளையும், முப்பெருந் தேவியர்களையும் தெய் வங்களாக வழிபாடு நடத்துகின்ற மதம். மும்மூர்த்திகளும் ஆக்கல் காத்தல், அழித்தல் ஆகிய முத் தொழில்களையும் முறையே செய்து வருகின்றனர். கல்வி, செல்வம், வீரம் ஆகியவற்றிற்கு முப்பெருந் தேவியர்களாகிய சரஸ்வதி, இலட் சுமி, சக்தி ஆகியோர் தெய்வங்களாக வழிபடப்படுகின்றனர்.

கல் தோன்றி மண் தோன்று காலத்தே மூத்த தமிழ் மகன் தமிழ் நாட்டில் வாழ்ந்தானென்று தமிழ் மொழி மற்றும் தமிழ் நாட்டு வர லாற்றிலிருந்து தெள்ளத் தெளிவாக அறிந்து கொள்ளலாம். தமிழ் என்ற சொல்லுக்கு அழகு, இனிமை, எளிமை என்பது பொருள். முருகு என்ற சொல்லுக்கும் அழகு, இளமை என்பது பொருள். தமிழ்மொழி யிலுள்ள திணை இலக்கணத்தில் தமி ழர்கள் தங்களுடைய நிலங் களை ஐவகையாகப் பிரித்தனர். அவை முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பதே யாகும்.

குறிஞ்சி நிலம் மலையும் மலை சார்ந்தபிரதேசமும் அடங்கிய பகுதி. இங்குவாழ்ந்தமக்கள் குரவர், குரவை யர். முக்கியத்தொழில் குறி சொல் லுதல், தினைப்புனம் காத்தல். முக்கிய உணவு தேனும், தினைமாவுமாம். குறிஞ்சி நிலமக்கள் வழிபட்டகடவுள் முருகன். குறிஞ்சி நில மக்கள் அந்த நிலத்தின் அமைப்புக்கும், வனப்பிற்கு மேற்ப முருகனைத் தங்கள் தெய்வமாக வழிபட்டனர்.

நாளாக—நாளாக குறிஞ்சி நிலமக்கள் காடும், காடு சார்ந்த பிரதேசமாகிய முல்லைநிலத்தில் குடியேறினர். முல்லை நில மக்கள் ஆடு—மாடுகளை வளர்த்து வந்தனர். அவர்கள் திருமாலை தங்களுடைய தெய்வமாக வழிபட்டனர்.

முல்லை நில மக்கள் சற்று வளமான வயலும் வயல் சார்ந்த பிரதேசமாகியமருதநிலத்திற்குக்குடிபெயர்ந்தார்கள். மருதநில மக்களின் முக்கியத் தொழில் விவசாயம். விவசாயத்திற்கு மழை தேவை. ஆகையால் மருத நில மக்கள் வருணனை தங்கள் தெய்வமாக வழிபட்டனர்.

மருத நிலத்தில் மக்கள் பெருக்கம் அதிகரிக்கவே கடலும், கடல் சார்ந்த பிரதேசமாகிய நெய்தல் நிலத்திற்கு குடிபெயர்ந்தார்கள். நெய்தல் நில மக்களின் முக்கியத் தொழில் மீன் பிடித்தல். நெய்தல் நில மக்கள் இந்திரனை தங்களின் தெய்வமாக வழிபட்டனர்.

கடைசியாக ஒரு பிரிவினர் நெய்தல் நிலத்திலிருந்து மணலும், மணல் சார்ந்த பிரதேசமாகிய வளம் குன்றிய பாலை நிலத்திற்குக் குடிபெயர்ந்தார்கள். பாலைநிலமக்களின்முக்கியத் தொழில் வழிப்பறி செய்தல். பாலை நில மக்கள் துர்க்கையை தங்களின் தெய்வமாக வழிபட்டார்கள்.

வரலாற்று ஆசிரியர்களால் அறுதியிட்டுக் கூற முடியாத காலத்தில் தமிழர்கள் முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்து நிலங்களில் பண்பாட்டோடும், கலாச்சாரத்தோடும் வாழ்ந்ததோடு அவர்கள் முருகன், திருமால், வருணன், இந்திரன், துர்க்கை ஆகிய தெய்வங்களை வழிபட்டுள்ளார்கள். ஒவ்வொரு நிலத்தின் தன்மைக்கேற்ப அவர்கள் இறைவனுக்குப் பெயர்சூட்டினார்களேயன்றி தெய்வங்களை வேறுபடுத்தி வழிபடவில்லை.

நிலங்களின் இயல்பிற்கும், தன்மைக்கும் மற்றும் அவர் தம் தொழிலுக்கும் ஏற்ப பெயரிட்டு ஐவகை நில மக்கள் தங்கள் தெய்வங்களை வழிபட்டார்களே தவிர புதுப்புது தெய்வங்களை அவர்கள் கற்பனை செய்து வழிபடவில்லை.

சிந்து சமவெளி நாகரீகம், மற்றும் தமிழரின் ஐவகை நிலங்களின் நாகரீகங்களை அடிப்படை அலகுகளாகக் கொண்டு கணக்கிட்டுப் பார்ப்போமேயானால் உலகம் என்று தோன்றியதோ, மக்கள் சமுதாயம் என்று வாழ்ந்ததோ அன்று முதலே இந்து மதம் பண்பட்டு விளங்கியது. மேலும் இந்து மதத்தின் தொன்மையும், பழமையும் பண்டையக் காலத்திய இந்து ஆலயங்களிலுள்ள கல்வெட்டுக்களிலிருந்தும் நன்கு அறியலாம்.

**இயற்கையும் இந்து சமயமும் :**

இந்து சமயம் இயற்கையோடு பின்னிப் பிணைந்துள்ளது. இந்துமதத்தில் நவக் கிரக வழிபாடு பிரதானமாகக் கடைபிடிக்கப்படுகிறது. மேலும் ஐம்பூதங்களும் பூஜிக்கப்படுகிறது.

நவக்கிரகங்கள் முறையே சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது என்பனவாகும். சூரிய வழிபாடு ஆதி காலத்திலிருந்தே இந்துக்கள் கடைபிடித்து ஒழுகும் முறையாகும். சிறப்புடன் இந்த உலகத்தில் துன்பமின்றி வாழ சூரிய வழிபாடு வழிகோலுகிறது. கவலைகளைத் தீர்த்துக் குறையின்றி வாழ சந்திரன் வழிபாடும், சிரமமின்றிச் செல்வத்துடன் வாழ செவ்வாய் வழிபாடும், இன்னல்களின்றி மகிழ்ச்சிகரமாக வாழ புதன் வழிபாடும், கிரக சிக்கல்களின்றிக் குணமுடன் வாழ வியாழன் வழிபாடும், செல்வத்துடன் சுகமாக வாழ வெள்ளி வழிபாடும், சச்சரவும் சங்கடமுமின்றி வாழ சனி வழிபாடும், கஷ்டங்கள் இன்றி வாழ ராகு வழிபாடும், வாதங்கள், வழக்குகளின்றி வாழ கேது வழிபாடும் இந்துக்களுக்கு பிரத்தியேகமாக உபதேசிக்கப்பட்டு நடைமுறைப்படுத்தப் பட்டுள்ளது. இயற்கையே இந்துக்களின் தெய்வம் என்றால் அது சாலப் பொருந்துமென்பதில் கிஞ்சிற்றேனும் ஐயமில்லை.

பஞ்ச பூதங்களான வானம், பூமி, நீர், காற்று, நெருப்பு, யாவும் உலக உயிர்களுக்கு இன்றியமையாதனவாக விளங்குகின்றன. வானம் மழையை பொழிய பூமியில் தானியங்கள் விளைகிறது. நீரும், காற்றும் இன்றி நாம் இவ்வுலகில் உயிர் வாழ முடியாது. நெருப்பு பூமியில் கிடைக்கும் தானிய வகைகளை வேக வைத்து உண்ண மிகவும் அத்தியாவசியமாகிறது. இந்த ஐம்பூதங்களினால் நம்முடைய உடல் உண்டாக்கப்பட்டுள்ளது. ஐம்பூதங்கள் யாவும் இயற்கையே. ஐம்பூதங்களை இந்துக்கள் வழிபடுவதன் நோக்கம் எல்லாம் இயற்கையிடமிருந்து செவ்வனே கிடைத்துப் பயன் பெறுவதற்காகும். மேற்குறிப்பிட்ட இக்காரணங்களால் இந்து மதம் இயற்கையானது என்பதும், இந்து மதத்தை யாரும் தோற்றுவிக்கவில்லை என்பதும், இந்து மதக் கொள்கைகள் மட்டும்தான் இந்து மதப் பெரியோர்களாலும், ஞானிகளாலும், தவமுனிவர்களாலும் போதிக்கப்பட்டன என்பதும் நமக்கு நன்கு விளங்குவனவாய் அமைந்துள்ளன.

**இந்து சமயமும் சமுதாயமும் :**

இந்து மதம் சமுதாய மக்களின் நலனோடு கலந்துள்ளது. சமுதாய முன்னேற்றத்திற்காக இந்து மதமே தவிர பிற மதத்தினருடன் போட்டிக்கோ — பொறாமைக்கோ அல்ல. இந்து மதம் கட்டாயமாக சமுதாயத்தினரிடையே கடைபிடிக்க செய்

## தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

### தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |
| 10. | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |

### சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஒ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூல மாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செய லாட்சித் தலைவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

யாமல் சுதந்திரமாகக் கட்டுக்கோப் புடன் கடைபிடிப்பதாகும். இந்து சமய சமுதாயம் பெரும்பான்மையாக ஏழ்மையிலேயே இருக்கின்ற காரணத் தால் சமுதாயம் உழைத்து வயிற்றை கழுவிக் கொள்ளும் பணியிலே தன்னை அர்ப்பணித்துள்ளது. இந்து மதம் சமுதாய மக்களிடமிருந்து நன் கொடைகளை எதிர்பார்த்திருப்ப தில்லை. சமுதாயம் விரும்பிக் கொடுத் தால் அதனைப் பெற்று நல்ல பல அறக் காரியங்களை செய்கிறது. கண் டிப்பு, வற்புறுத்தல் போன்றவை இந்து மதத்தில் இல்லை. விருப்ப முள்ளவர்கள் வேறு மதத்திற்கு மாறினாலும் இந்து மதம் அவர்களைக் கண்டிப்பதில்லை.

பெரும்பாலான ஏழை—எளிய—பாமர—பாட்டாளி—தொழிலாளி சமு தாய மக்களே இந்து மதத்தில் உள் ளனர். மக்கள் மதத்திற்காக என் பதனை விடுத்து மதம் தான் மக்களுக்கு என்கின்ற சமுதாய முன்னேற்றத் தில் வீறுநடை புரிகின்றது இந்து மதம். வெளிநாட்டின் உதவியின்றி ஏழை மக்களாகவே தங்களாலான அளவில் இந்து ஆலயங்களில் திரு விழாக்களை நடத்துகின்றனர். இந்து மத ஆலயங்கள் நம் நாட்டின் வர லாற்றுச் சின்னங்களாக சமுதாயத் திற்கு நலம் பயக்கின்றன.

முடிவுரை :

நாம் வாழும் இந்தப் புண்ணிய பூமியே நம்முடைய இந்து மதத்தின் பிறப்பிடம். கால அளவைக் கடந்து, இயற்கையோடும்—சமுதாயத்தோடும் பின்னிப் பிணைந்திருக்கும் நம் மத மாகிய இந்து மதத்தை வளர்க்க அதன் கொள்கைகளைப் படித்துச் செயல்படுத்தி அதன் வழி இந்திய சமுதாயம் ஒழுக இந்திய குடிமக் களும், இந்துக்களுமாகிய நாம் ஒவ் வொருவரும் சபதமேற்றுச் செயல் படுத்த முனைவோமாக! 卐

# கிருஷ்ண பகவான் ஓர் அரசியல் மேதை

அரசியற் கட்சியில் அங்கம் வகிப்போர் எதிர் கட்சியிலுள்ள பலசாலிகளைச் சூழ்ச்சிகள் மூலம் தன் கட்சிக்கு இழுக்க வேண்டும். இயலாவிட்டால் அவர்களது பலத்தைக் குறைக்க வேண்டும். குறைக்க முடியாவிட்டால் அக்கட்சியிலுள்ளவர்களின் நம்பிக்கை இழக்கும்படியாகச் செய்துவிடவேண்டும். எனவேதான் அரசியலை 'இழிபடுபோர், கொலை, தண்டம் பின்னியேகிடக்கும் அரசியல்'. என்றான் மகாகவி பாரதி. பகவான்கிருஷ்ணன் ஓர் அரசியல் மேதை.

இயற்கையின் பாங்கை உள்ளபடி ஏற்பதே மனபரிபாகமடைந்தவனின் குறிக்கோள். வனத்தில் வீழ்ந்து கிடக்கும் முட்களை ஆராய்வதற்குச் சமமானது, மானுடப் பிறவிகளிடையே அமைந்துள்ள கேடுகளை ஆராய முற்படுவது. முட்கள் நிறைந்த வனாந்தரத்தைக் கடப்பதே மானுட வாழ்வு.

கடப்பதற்கு வகுக்கப்பட்ட முறைகள் இரண்டு. முட்களை அப்புறப் படுத்துவது ஒரு முறை. மிதியடி அணிந்து செல்வது மற்றொரு முறை. சிறந்த அறிவாளி தேர்ந்தெடுக்கும் முறை — மிதியடி அணிந்து செல்லும் முறையினையே.

கௌரவர்களாகிய முட்களை 'தர்மம்' என்ற மிதியடிகளை அணிந்து கொண்டு கடந்து சென்றார்கள் பாண்டவர்கள். அவர்களுக்கு உறுதுணையாக நின்றான் பகவான் கிருஷ்ணன். உறவினர்கள் என்பதற்காக அல்ல; தருமத்தில் நிற்கின்றார்கள் என்பதற்காக.

பாரத யுத்தம் நடக்கக்கூடாதென்பதற்காக தருமபுத்திரன் வேண்டுகோளினை ஏற்று கௌவர்களிடம் தூது செல்கிறான் பகவான் கிருஷ்ணன். செல்வதற்கு முன் திரௌபதி அவனிடம், 'அன்று விரித்த வருங்கூந்தல் வல்வினையேன் என்று முடிப்பது இனி எம்பெருமான்' என்று அழுதாள். அப்பொழுது கிருஷ்ணன் அவளைத் தேற்றி 'கரிய கூந்தலையுடைய திரௌபதியே! கேட்பாயாக! வயலை உழும் அரிய கொழுப்படை போன்று கௌரவர்களுடைய உடல்களாகிய வயலிலே உழுதற்கரிய கொழுப்படையென்று சொல்லத் தக்கவன் அபிமன்யு. அவன் யுத்தத்திலே சிறந்த வாளாயுதத்தை யுடையவன். ஒன்றாகக் கூடிய உழலுகின்ற கொடுங்கோலின் தன்மையையுடைய அரசர்களின் குலங்களைக் கொல்வான். உன்னுடைய கூந்தலையும் முடியாமல் விடமாட்டான்' என்று கூறினான்.

---

ஸ்ரீவில்லிபுத்தூர் ஏ. ஸ்ரீராமுலு தேசிகன்

---

"மைக் குழலாய் கேளாய் மருவார் உடற்புலத்துப்
புக்குழலாகுங் கொழுவாம் போர் வாளபி மன்னுத்
தொக்குழலும் வெங்கோன்மைத் தொல் வேந்தர் தங்குழலும்
இக் குழலுஞ் சேர முடியா திரா னென்றான் ".

—வில்லி பாரதம்.

திரௌபதிக்குக் கிருஷ்ணன் வாக்களித்ததைச் சிந்திக்கும்பொழுது பாரத யுத்தம் நடப்பது நிச்சயம் என்பது தெளிவாகிறது. பின்பு ஏன் கிருஷ்ணன் தூது சென்றான்? தான் ஓர் அரசியல் மேதை என்பதை மக்களுக்கு உணர்த்துவதற்காகத் தூது சென்றான் என்கிறார் பெரியாழ்வார்.

கௌரவர்களைச் சாந்துள்ள பலசாலிகளுக்கும் துரியோதனனுக்கும் கருத்து வேறுபாடுகளை உண்டாக்கிப் பின்பு அதன் விளைவாகப் பாரத யுத்தத்தில் எல்லாவிடத்திலும் எதிரிகள் ஒருவரில்லாதபடி பிணமாக்கி அழித்வனே என்று திருமாலிருஞ்சோலை சுந்தரராஜப் பெருமாளைக் கிருஷ்ணனாகப் பாவனை செய்து அருளிச் செய்கிறார் பெரியாழ்வார்.

"பேதம் செய்து எங்கும் பிணம்படுத்
தாய்
திருமாலிருஞ்சோலை எந்தாய் !

(பெரியாழ்வாா திருமொழி 5-3-4)

கௌரவர்களைச் சார்ந்துள்ள பலசாலிகளிடமிருந்த ஆயுத பலத்தைக் குறைத்தும், நம்பிக்கை இழக்கச் செய்தும் பாண்டவர்களை வெற்றியடையச் செய்வதற்காகக் கிருஷ்ணன் தூது சென்றான். தூது செல்லாவிட்டால் கிருஷ்ணன் தேரோட்டினாலும் கூடப் பாண்டவர்கள் வெற்றியடைய முடியாது.

விதுரனிடம் அர்ச்சுனன் வில்லுக்கு எதிர் நிற்கக் கூடிய வில் ஒன்று இருந்தது. அரன் வில், அச்சுதன் வில். அந்த இரண்டுக்கும் ஒப்பான வில் விதுரன் வில். அந்த வில்லுடன் விதுரன் யுத்தகளத்திற்கு வந்துவிட்டால் பாண்டவர்களால், எதிர்த்துப் போராட முடியாது. அந்த வில்லை விதுரனே ஒடிக்க வேண்டும். யுத்த களத்திற்கு வராமல் அவனாகவே ஒதுங்கிக் கொள்ள வேண்டும் என்பதற்காக, தூது சென்றபொழுது அவனது குடிலுக்குச் சென்றான் கிருஷ்ணன். தன்னுடைய மாளிகைக்கு வராமல் தன்னை அலட்சியபடுத்திய கிருஷ்ணனை உபசரித்தமைக்காக சபையோர் நடுவில்விதுரனை வரம்பு மீறி ஏசினான் துரியோதனன். தாங்கொணா ஆத்திரமடைந்த விதுரன் அப்பொழுதே தனது வில்லை

## ஷண்மதங்கள் ஆறு

ஷண்மதங்கள் ஆறு வகைகள் என்று கூறுகிறார்கள். கணபதி முழு முதற்கடவுளாக வழிபடுவது காண பத்தியம். ஆதித்தன் என்ற சூரிய பகவானைச் சொல்வது ஸௌரம்; அம்பாளை (சக்தி) பரமதாத்பர்யமாகக் கொள்வது சாக்தம்; சிவபெருமானைச் சொல்வது சைவம்; விஷ்ணு பெருமானை சொல்வது வைஷ்ணவம். இன்னொன்று சுப்ரமண்யரையே பரமாத்மாவாக உபாசிப்பது. இங்கே "குமார வழிபாடு" என்ற பொருளில் 'கௌமாரம்' என்ற பெயர் உண்டாயிருக்கிறது.

எம். கே. நாமகிரி ஸ்ரீநிவாசன்-சென்னை-39.

ஒடித்துவிட்டுத் தான் யுத்தத்தில் பங்கெடுப்பதில்லை என்று சபதம் செய்தான். கிருஷ்ணனுடைய ராஜ தந்திரத்தால்விதுரனுடையபலத்தை இழந்தான் துரியோதனன்.

குந்திதேவியைக் கர்ணனிடம் அனுப்பி உறவு முறையை வலியுறுத்தி அவனிடமுள்ள நாகாஸ்திரத்தை ஒரு தடவைக்கு மேல் போர்க்களத்தில் விடக்கூடாதென வரம் கேட்கும்படிச் செய்தான். கேட்டு அவளும் வரம் பெற்றாள். பின்னர் போர்க்களத்தில் கர்ணன் அர்ஜுனனை நோக்கி நாகாஸ்திரம் விடும்பொழுது தேரை பூமியில் அழுத்தி அவனைக் காப்பாற்றினான் கிருஷ்ணன். கிருஷ்ணனுடைய சூழ்ச்சியினால் நாகாஸ்திர பலத்தை இழந்தான் கர்ணன்.

கவசகுண்டலங்களை இந்திரனுக்குத் தானம் அளிக்கும்பொழுது அவனிடமிருந்து வலிமைமிக்க சக்தி ஆயுதம் ஒன்று பெற்றிருந்தான் கர்ணன்' அதனைப் பத்திரமாகக் காப்பாற்றி வந்தான் அர்ஜுனனைக் கொல்வதற்காக. அர்ஜுனனைத் தடுத்துப் பீமன் மகன் கடோத்கஜனை அனுப்பினான், கர்ணன் அந்த ஆயுதத்தை இழப்பதற்காக. கிருஷ்ணனுடைய சூழ்ச்சியால் சக்தி ஆயுத பலத்தையும் இழந்தான் கர்ணன்.

அசுவத்தாமனிடம் கிருஷ்ணன் 'இப்புவியில் உன்னுடைய ஆண்மைக்கு நிகரானவர் இல்லை. உனக்குப் பாண்டவரிடத்தில் வெறுப்பும் இல்லை. அன்புண்டென்பதை நான் அறிவேன். உன் மனமறிய அஃது உண்மையாக இருக்குமானால், பாண்டவர்கள் எவ்விதத்திலும் பழிப்பற்றவர் பிழைப்பற்றவர் என்று நீ கூறுவது உண்மையானால், அரவக் கொடியோன் துரியோதனன் எவ்வளவு வற்புறுத்தினபோதிலும்போர்க்களத்திற் சேனாதிபதியாகவிருந்து சேனையைச் செலுத்த ஒப்புக் கொள்ளமாட்டாயென்று நம்புகிறேன். அப்படியானால் தான் உன் மனதிற்கு உகந்த பாண்டவரும் வெற்றிபெறல் முடியும்' என்று தூரத்திலுள்ள துரியோதனனுடைய காதுகளில் கேட்கும்படியாக உரத்தக் குரலில் சொன்னான் கிருஷ்ணன். பின் தன் விரல் மோதிரத்தைப் பூமியில் நழுவ விட்டான் தந்திரமாக. அசுவத்தாமன் பயபக்தியுடன் அதனை எடுத்துக் கொடுத்தான் இங்கிதமாக. கைகளோடு அதனைப் பொருத்தி "அதோ பார்! சூரியனையும் பரிவேடம் சூழ்ந்திருக்கிறது," என்று பார்க்கச் சொன்னான் கிருஷ்ணன். பார்த்தான் அசுவத்தாமன்.

சந்தேகம் கொண்டான் துரியோதனன். வெகுண்ட மனமுடன் பார்த்தான் தனக்கு உதவ வந்த மன்னர்களை; கூறினான் கிருஷ்ணன் காட்டிய மாய வித்தைக்கு அசுவத்தாமன் வசப்பட்டதை; காட்டினான் பாண்டவரிடம் அசுவத்தாமனுக்கு இருக்கும் அன்பைக் காட்ட மோதிரம் தொட்டுச் சூரியனைப் பார்த்துச் சூளுரைத்ததை; நான் நம்புவது எப்படி இவனை? நான் எப்படித்தெளிவது, உண்ட வீட்டிற்கு இரண்டகம் நினைக்கப்படும் இவனை? என்று கோபமாகக் கூறினான் துரியோதனன்.

### கர்மாக்கள் :

மானிடராகப் பிறந்தவரெல்லாம் இவ்வுலக வாழ்விலும், மறு உலக வாழ்விலும் சுகம்பெறும் பொருட்டு மூன்று வகையான கர்மாக்களை செய்ய வேண்டுமென வேதங்களும், புராணங்களும் கூறுகின்றன. அவை நித்ய கர்மா, நைமித்திக கர்மா, காம்ய கர்மா என்பனவாகும்.

### நித்ய கர்மா :

தினமும் செய்ய வேண்டிய சந்தியா வந்தனம், பரம யக்ஞம், அக்கினி தோத்திரம் ஆகியவைகள் நித்ய கர்மாக்கள் ஆகும்.

### நைமித்திக கர்மா :

தினப்படி அல்லாமல் குறிப்பிட்ட காலத்தில் அவசியம் செய்ய வேண்டிய காரியங்கள் நைமித்திக கர்மாக்கள் ஆகும்.

### காம்ய கர்மா :

மழை, சந்தானம் போன்ற ஏதாவது ஒரு பலனை எதிர் பார்த்து செயல்படுவது காம்ய கர்மாக்கள் ஆகும்.

கர்மாக்கள் நாம் நலம் பெறும் பொருட்டு நமக்கு நம் முன்னோர் காட்டிய நல்வழியாகும்.

—முடிவை முத்து.

"முனிவன் புதல்வன் மோதிரந்
தொட்டருஞ் சூள் முன்னர் மொழி
இன்றுன்
இனி வந் துறவாய் நின்றுலும்
எங்ஙன தெளிவ திவனை யெனத்
துனிவந் தரசர் முக நோக்கிச்
சொன்னு னிடியே றன்றுனே"

(வில்லி பாரதம்)

கிருஷ்ணனுடைய சூழ்ச்சியால் அசுவத்தாமனிடம் அவ நம்பிக்கை கொண்டு அவனைச் சேனதிபதியாக்காமல் அவனுடைய பலத்தை இழந்தான் துரியோதனன்.

விதுரனுடைய வில்லை ஒடிப்பதற்காகவும், கர்ணனுடைய ஆயுத பலத்தைச் செயலிழக்கச் செய்வதற்காகவும், அசுவத்தாமனிடமுள்ள துரியோதனனுடைய நம்பிக்கையை நீக்குவதற்காகவும் கிருஷ்ணன் தூது சென்று இராஜ தந்திர முறைகளைக் கையாண்டு ஓர் அரசியல் மேதையாக விளங்கினுன். 'வஞ்சகர்களுடைய சூதாட்டம் நான்' என்று கீதையில் கூறியதை (10–36) தூது சென்ற பொழுது நடத்திக் காட்டினுன்.

குருகுலத்தலைவரான பஞ்ச பாண்டவர்களை உண்மையான உறவினர்களாகக் கௌரவர்களுடன் வாழச் செய்வதற்காகத் தூது செல்லவில்லை கிருஷ்ணன். பொய்யுறவைப் பாராட்டிக் கொண்டு தூது சென்றுன் என்கிறுர் பெரியாழ்வார். விதுரன் அசுவத்தாமன் போன்ற பலசாலிகளைத் துரியோதனனிடமிருந்து பேதப்படுத்திப் பிரிப்பதற்காகவே தூது சென்றுன் என்று மேலும் கூறுகிறுர்.

"தூது சென்றுய் குரு பாண்டவர்க்
காய்
அங்கோர் பொய்ச் சுற்றம் பேசிச்
சென்று
பேதம் செய்து எங்கும் பிணம்
படுத்தாய்
திருமாலிருஞ் சோலை எந்தாய்!



# ஸ்வாபதேசம் - அந்நியாபதேசம்

பக்தி இலக்கியத்தில் அகப் பொருள் மரபு பின்பற்றப்பட்டுள் ளது. நாயன்மார்கள் பலரும், குறிப் பாக மாணிக்கவாசகப் பெருமான் போன்றவர்கள், இந்த மரபைக் கைக் கொண்டு பாசுரங்கள் பாடியிருப்பி னும், ஆழ்வார்களில் பலரும், சிறப் பாக திருமங்கை ஆழ்வார் தமிழ் அகப்பொருள் மரபுகளைத் தழுவிப் பாசுரங்கள் பாடியிருக்கிறார். இறை வனைத் தலைவனாகவும், தம்மைத் தலைவியாகவும் கருதிப்பாடும் நாயகி பாவ உத்தியாவது சமயாச்சாரியர் பலரும் பன்னெடுங்காலமாகவே கை யாண்ட ஓர் உத்தியாகும்.

அந்தவிதமான பாசுரங்களுக்கு உள்ளுறைப் பொருள் கூறுதற்கு வைணவ மரபில் "ஸ்வாபதேசம்" என்பர். வெளிப்படையாக அமைந்த பொருளுக்கு "அந்நியாபதேசம்" என்று பெயர். உள்ளுறைப் பொரு ளையே வைணவர்கள் சிறந்ததாகக் கொள்வர். அவ்வாறு கூறப்படும் பொருள் தத்துவத்தோடு தொடர் புடையதே ஆகும். அதன் பொருட்டே ஆழ்வாராதிகளின் பாசு ரங்களுக்கு எல்லாம் தத்துவமுறை யில் விளக்கம் கூறும் விரிவுரைகள் எழுந்தன. உத்தம அன்பை வெளிப் படுத்தல் வேண்டி இவ்வகைத்தான அகத்துறையிலும் உயர்ந்த இடம் வேறு இல்லையாதலின், முழுமுதற் கடவுளிடத்துப் பேரன்பு செலுத்தி, ஆடிப்பாடி, அகங்கரைந்த அடியார் களும் கூட, அக்கடவுளரையும், தம் மையும், நாயக நாயகியர்களாக பாவித்துக் கொண்டு இவ்வகத்துறை களின் வாயிலாக பக்தியென்னும் பெருவெள்ளத்தில் முழு ஆனந்தப் பரவச மெய்தினர்கள்.

மற்ற பிற ஆழ்வாராதிகள் பாடிய பாசுரங்களிலும், நாயகி பாவப் பாசு ரங்களாக பல அமைந்துள்ளன. பெண் பேச்சில் தொடங்கும் இப்பாசு ரங்கள், அவைகளைப் பாடியவர்கள் ஆடவர் என்பதை பாசுரத்தின் முடி வில் உணர்த்திவிடுகின்றன.

திருமங்கை ஆழ்வார் தாம் பாடிய 'சிறிய திருமடல்', 'பெரிய திருமடல்' ஆகிய இரண்டு திருமடல்களிலும் தானே பெண்ணாக மாறிப் பேசுகிறார். அந்த இரு திருமடல்களிலும் காதல் மீதுறப்பெற்ற பரகால நாயகி பாவத் தைத்தான் முழுமையாக நாம் உணர முடிகிறது. அந்த இருமடல்களிலும் நாயகி பேச்சாகத் தொடங்கி நாயகி பேச்சாகவே முடிந்திருக்கிறார் என்பது உணரத்தக்கது. நாயகி பாவத்தை வெளியிடுவதில் திருமடல்கள் தனித் தன்மை வாய்ந்தவையாகும்.

திருமடல்களில் திருமங்கையாழ் வார், தாமான தன்மை மாறிப் பிராட்டி நிலை பெற்றதைக் காண் கிறோம். ஆழ்வார் அடைந்த பெண்மை நிலையை இந்த திருமடல் களின் வரிகளிலிருந்து அறியலாம்.

"ஏரார் இளமுலையீர் என்றனக்கு
குற்றமுதான்
காரார் குழலெடுத்துக் கட்டி–கதிர்
முலையை
வாரார வீக்கி மணிமேகலை திருத்தி
ஆரா ரயிலவேற் கண் அஞ்சனத்தின்
நீறணிந்து
சீரார் செழும் பந்து கொண்டியா
நின்றேன் நான்"

சிறிய திருமடல்—

"என்னுடைய நெஞ்சும் அறிவும்
இனவளையும்
பொன்னியலும் மேகலையும் ஆங்
கொழியப் போந்தேற்கு"

பெரிய திருமடல்—80–81

திரு. எம். மாரிமுத்து
ஈரோடு

"என்னுடைய பெண்மையும் என்
நலனும் என் முலையும்
.................................90
முன்னிருந்து மூக்கின்று மூவாமைக்
காப்பதோர்
மன்னும் மருந்தறிவீ ரில்லையே".

பெரிய திருமடல்—92

திருமங்கை ஆழ்வாருக்குப் பெண்மை நிலை தானாகவே வந்தடை கிறது.அவர் பெண்ணாகப் பேசுகிறார். அதனால்தான் பரகாலன் என்னும் பெயருடைய திருமங்கையாழ்வார்

(36-ம் பக்கம் பார்க்க)

## மருமானும் மருமகனும்

பார்வதி தேவி ஸ்ரீ மகாவிஷ்ணுவின் தங்கை. தங்கை புதல்வன் மருமானாவான். அதனால்தான் அருணகிரி நாதர் முருகனை மாலமருகன் என்று தனது திருப்புகழில் அடிக்கடி கூறுகின்றார். மருகன் என்றால் மாப்பிள்ளை என்ற ஒரு அர்த்தமும் இருக்கிறது. முருகனின் இரு மனைவி யர்களான வள்ளியம்மை, தேவசேனை முன் ஜென்மத்தில் விஷ்ணுவின் புத்திரிகளாகப் பிறந்தனர். இந்த ஜென்மத்தில் முருகனை மணந்த தனால் விஷ்ணுவின் மருமகப்பிள்ளையாகின்றார். ஆதலால் அருணகிரி நாதர் இரு அர்த்தங்கள் வெளிப்படும்படி தன் திருப்புகழில் "மால் மரு கோனே" என்று அடிக்கடிக் கூறுகின்றார்.

எம். கே. நாமகிரி ஸ்ரீநிவாசன்-சென்னை-39.



# திருமுருகன் திருவுருவம்

முருகன் குமரன் குகன்என்று
மொழிந்து
உருகும் செயல்தந் துணர்வென்
றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவும்
குருபுங் கவஎண் குணபஞ் சரனே.

—அருணகிரிநாதர்.

வாக்கு மனம் முதலியவற்றிற்கு எட்டாத பரம்பொருளை நினைப்பதற்கும், வாழ்த்துவதற்கும், வணங்குவதற்கும் நம்முடைய திருக்கோயில்களே துணைக் கருவிகளாக இருந்து வருகின்றன. அக்கோயில்கள் பல திறத் தத்துவங்களையுடைய ஓவிய நிலையங்களாகும். அவைகளில் சிவலிங்கம், திருமால், தேவி, விநாயகன் முருகன், கண்ணன், நடராசன், தட்சிணாமூர்த்தி அடியவர்கள் முதலியவர்கள் திருவுருவங்களை வைத்து வழிபடுகின்றோம். 'ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமிலாற்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ' என்ற மணிவாசகர் திருமொழி ஈண்டு நினைவு கூர்தற்பாலது. திருமுருகப் பெருமானின் திருஉருவ உண்மைப் பொருளை விளக்க எழுந்ததே இக்கட்டுரையாகும்.

முருகு என்ற முதல் நிலை அன் என்ற ஆண்பால் இறுதி நிலையுடன் சேர்ந்து முருகன் என்றாயிற்று. முருகு என்பது பல பொருள் கொண்ட ஒரு சொல். சிறப்பாக இளமை, அழகு, மணம், கடவுள் தன்மை, தேன் என்ற பொருளைக் கொள்ளலாம். ஆதலின் முருகன் மாறாத இளமையும், அழியாத அழகும், குறையாத நறுமணமும், நிறைந்த தெய்வத் தன்மையும், தெவிட்டாத இனிமை உடையவன் என்று கொள்ளலாம். "என்றும் இளையாய் அழகியாய்" என்ற பழம் பாடற்பகுதி இங்குக் கவனிக்கத் தக்கது. ம்-ர்-க் என்ற மெல்லின, இடையின, வல்லின மெய்யெழுத்துக்களுடன், உ என்ற உயிரெழுத்து ஒவ்வொன்றுடனும் சேர்ந்து முருகு என்றாயிற்றென அறிஞர் கூறுகின்றனர். உகரம் சக்தி எழுத்து. சக்தியானது இச்சை, அறிவு, செயல் என்ற மூன்று பிரிவில் வெளிப்படும். வலிந்தும், மெலிந்தும், நடு நின்றும் செய்ய வேண்டியவற்றைச் செய்ய வேண்டும் என்பதை மூவகை மெய்யெழுத்துக்களும் குறிக்கும்.

ஐம்முகச் சிவனுக்கும், ஆறுமுகச் சிவனுக்கும் பேதமில்லை என்பது ஆன்றோர் வழக்கு. அசுரர்கள் கொடுமைகளைப் பொறுக்க முடியாததேவர்கள் சிவபிரானை அணுகிஅவரே, அவரிடம், அவர்போல் ஒரு மகனை அருள வேண்டும் என்று விண்ணப்பிக்கின்றனர்.

புலவர். பொன். சுப்பிரமணியன்,
திருக்கண்ணபுரம்.

தெரிந்து கொள்ளுங்கள் ;

பக்தியை வளர்க்கும் ஒன்பது வகை சாதனைகள்

| | | |
|---|---|---|
| 1. சிரவணம் | : | ஆண்டவனின் பெருமையைக்காதால் கேட்பது |
| 2. கீர்த்தனம் | : | பாடிப்பரவசமடைவது. |
| 3. ஸ்மரணம் | : | தியானித்து (நினைத்து) இருப்பது; |
| 4. பாதஸேவனம் | : | திருத்தொண்டு செய்வது. |
| 5. வந்தனம் | : | தண்டனிட்டு வணங்குவது. |
| 6. அர்ச்சனம் | : | அர்ச்சனை (பூஜை) செய்வது. |
| 7. தாஸ்யம் | : | 'ஆண்டவனுக்கு அடியவன் நான்' என்ற தீர்மானத்துடன் அவன் பணியே செய்து வருவது. |
| 8. ஸக்யம் | : | நட்புணர்வோடு ஒன்றி வழிபடுவது. |
| 9. ஆத்ம நிவேதனம் | : | தன்னையே பகவானுக்கு அர்ப்பணிப்பது. |

பகவானை வழிபட்டு அருளைப் பெற பக்திதான் சிறந்தது. இந்த ஒன்பது வகை சாதனங்களில் ஏதாவது ஒன்றின் மூலம் ஆழ்ந்த ஈடுபாட்டுடன் 'எல்லாம் பகவானுக்கே அர்ப்பணம்' என்ற திட நம்பிக்கையுடன் பக்தி புரிவதுதான் உத்தமமான உபாஸனை.

தொகுத்தவர். கமலா மாரியப்பன்.
கோயம்பத்தூர்.

கந்த புராணத்தில்,

ஆதியும் நடுவும் ஈறும் அருவமும்
உருவும் ஒப்பும்
ஏதுவும் வரவும் போக்கும்
இன்பமும் துன்புமின்றி
வேதமும் கடந்துநின்ற விமலா
ஓர் குமரன் தன்னை
நீ தரல் வேண்டும் நின்பால்
நின்னையே நிகர்க்க

என்றது இதற்குப் போதிய சான்று. 'ஈசனே அவனுடலால் மதலையாகினன் காண், பேசில் ஆங்கவன் பரனோடு பேதகன் அல்லன்' என்றும், சிவபெருமான் கூற்றாக 'ஆதலின் நமது சக்தியாக ஆறுமுகன் அவனும் யாமும் பேதகம் அன்றால் நம்போற் பிரிவிலன் யாண்டும் நின்றான்.' என்றும் கச்சியப்ப சிவாசாரியர் மேலும் வலியுறுத்தியிருக்கின்றார். அவன் பிறப்பு, இறப்பு இல்லாதவன் என்பதை "பெம்மான் முருகன் பிறவான் இறவான்" என்ற கூற்றால் அறிகிறோம்.

முருகன் ஆறுமுகம் கொண்டதன் உண்மை சிந்தித்தற்குரியது. சிவபெருமானுடைய ஐந்து முகங்களுடன் அதோமுகமும் சேர்ந்து ஆறுமுகமாயின. சிவத்திற்குரிய தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம், ஈசானம் என்ற முகங்கள் ஐந்துடன், சிற்சக்தியாகிய சிவசக்தியின் அதோமுகம் என்னும் கீழ்நோக்கிய முகம் ஒன்றுமாக ஆறு திருமுகங்கள் கொண்டு முருகன் சிவசொரூபமாகவும், சக்தி சொரூபமாகவும் விளங்குகின்றான். நான்கு திசைகளையும் மேல் கீழிடங்களையும் ஆறுமுகங்களின் அருள் நோக்கால் பரிபாலனம் செய்கிறான். ஒரு பெட்டிக்கு ஆறு பக்கங்கள் உண்டு. ஒரு பக்கம் இல்லையேல் அது பயன்படாது போகுமல்லவா? முருகன் சமஷ்டி தெய்வம். சர்வஞ்சிதை (முற்றறிவு), திருப்தி (வரம்பில் இன்பம் உடைமை), அநாதி போதம் (இயல்பாகவே பாசங்களின் நீங்குதல்), அநந்த சக்தி (பேரருள் உடைமை), சுவ தந்திரத்துவம், (தம் வயமுடைமை) என்ற இறைமைக் குணங்களும் அமையப் பெற்றவன். இதைக் கந்த புராணத்தில்,

" ஏவர்தம் பாலும் இன்றி எல்லைதீர்
அமலர்க்குள்ள
மூவிரு குணனும் சேய்க்கு முகங்
களாய் வந்ததென்னப்
பூவியியல் சரவ ணத்தண் பொய்கை
யில் வைகும் ஐயன்
ஆவிகள் அருளு மாற்றால் அறுமுகம்
கொண்டான் அன்றே"

என்று கூறப்பட்டிருக்கிறது. ஆறு முகங்கள் என்பன திரு, புகழ், ஞானம், வைராக்கியம், வீரியம், ஐசுவரியம் என்பதை 'வாதினையடர்ந்த' என்று தொடங்கும் திருப்புகழில், 'ஆதியொடந்தம் ஆகிய நலன்கள் ஆறுமுகம் என்று தெரியேனே' என்று அருணகிரிநாதர் விளக்கியுள்ளார்.

இந்த ஆறுமுகங்களின் செயல்கள் யாவை என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஒரு முகம் உலக இருளைப் போக்கி ஒளியைத் தருகின்றது; ஒரு முகம் அந்தணர் வேள்வியைப் பாதுகாக்கின்றது; ஒரு முகம் முனிவர்க்கு நூற்பொருளை விளக்குகின்றது; ஒரு முகம் அசுரரை அழித்துக் களவேள்வி புரிகின்றது; ஒரு முகம் வள்ளியம்மையுடன் நகைமமைகின்றது; ஒரு முகம் அருளொளி வீசுகின்றது. நக்கீரனார் இயற்றிய திருமுருகாற்றுப் படையின் திருச்சீரலைவாய்ப் பகுதியில் இதன் விரிவைக் காணலாம்.

பிற்காலப் பாடலான 'ஏறு மயில் ஏறி' என்பதில் விளையாடும் முகம் ஒன்றே என்பதில் அறுமுகங்களின் தொழில்களைச் சிறிது வேறு பாட்டுடன் காண்கிறோம். மயில் ஏறி விளையாடும் முகம் ஒன்று; ஈசனுடன் ஞானமொழி பேசும் முகம் ஒன்று; ஈசன் அடியார்களின் வினை தீர்க்கு முகம் ஒன்று; குன்றுருவ வேல் வாங்கி நின்ற முகம் ஒன்று; மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்று;

வள்ளியை மணம் புணர்ந்த முகம் ஒன்று என்று அது கூறுகிறது.

ஆறுமுகப் பெருமானுக்குப் பன்னிரண்டு மாதங்கள் அல்லது பன்னிரண்டு இராசிகள் என்று அறிஞர் கூறுவர். திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் பன்னிரு திருக்கரங்களின் தொழில்களை விளக்கியுள்ளார். ஒரு கை தேவர்களையும் முனிவர்களையும் பாதுகாக்க அமைந்தது. ஒரு கை இடுப்பிலே வைத்தது; ஒரு கை ஆடை அணிந்து தொடையிலே கிடப்பது; ஒரு கை அங்குசத்தைப் பிடித்துச் செல்வது; இரு கைகள் கேடகத்தையும், வேலாயுதத்தையும் சுழற்றுவன; ஒரு கை மார்பிலே தங்கி விளங்குவது; ஒரு கை மாலையுடன் அழகு பெறத் தோன்றுவது; ஒரு கை உயர்த்தப்பட்டதாய் நழுவித் தாழ்கின்ற தொடியோடு மேலே சுழன்று கொண்டிருப்பது; ஒரு கை இனிய மணி ஓசை புரிவது; ஒரு கை மேகத்தினின்றும் மழைபொழியச் செய்வது; ஒரு கை தெய்வ மகளிர்க்கு மண மாலை சூட்டுவது. ஆறுமுகங்களுக்கும் மேலே சொன்ன செயல்களை ஒட்டி பன்னிரண்டு கைகளுக்கும் முறையே தொழில்களாக அமைத்து நக்கீரர் பாடியிருப்பது நுணுகி ஆராய்வாருக்குப் புலப்படும்.

முருகன் பக்கத்தில் வள்ளியும் தெய்வ யானையும் திருக்கரத்தில் மேலும் திகழ்கின்றன. வள்ளி இச்சா சக்தியையும், தெய்வ யானை கிரியா சக்தியையும், வேல் ஞான சக்தியையும் உணர்த்துகின்றன. செயல் திறத்தால் அசுரர்களைக் கொன்றதால் தேவர்கள் தெய்வயானையை அழைத்து வந்து முருகனுக்குத் திருமணம் செய்து வைத்தனர். ஆனால் வள்ளியைத் தேடிச் சென்று வதுவை வேட்டான். மாயையாகிய தினைப் புனத்தில், ஐம்புலன்களாகிய வேடர் நடுவிலுள்ள, ஜீவான்மாவான வள்ளியை, ஓங்காரமான ரூபமான ஆறுமுகனைக் காட்டி, பரமான்வான முருகன் ஐக்கியம் செய்து கொண்டனன் என்பர். சண்முகலகரியில் 'விரிவும் ஐம்புலப் பொய் வேடர் அவசமுற்ற வித்தையால், திரிதலுற்ற ஜீவாத்ம சிறுக்கி வள்ளியைச் சிறை பரிந்தெடுத்து ஐக்கிய பாவமாய்ப் புணர்ந்தனன்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அறிவு ஆற்றலைக் குறிப்பதே ஞான சக்தி வேலாயுதம்; மக்களின் அகஇருளைப் போக்கி ஒளி அருளச் செய்வது.

குமரக் கடவுளுக்கு வாகனமாகவும் கொடியாகவும் விளங்குபவை மயிலும், சேவலும். இவை உயிர்கள் மாட்டு காட்டும் ஒப்பற்ற ஆற்றலை, கருணையைக் குறிக்கின்றன. பகைவனுக்கும் அருள் செய்யும் பண்பு முருகனிடமே முதன்மைப் பெற்றுக் காணப்படுகின்றது. சூரபதுமன் மயிலாகவும், சேவலாகவும் போருக்கு வந்தபோது, மயில் மேல் ஏறிக் கொண்டு கோழியைக் கொடியாகப் பிடித்துக் கொண்டான். 'மயில் மேல் சுப்பிரமணியம் இருப்பது போல் இருப்பது' என்று ஒரு பழமொழி உண்டு. அதாவது பட்டதும் படாததுமாகவும் மிகவும் எச்சரிக்கையாகவும் இருப்பது என்பது அதன் பொருள். முருகன் மயில் மேல் அழுத்தியமர்ந்தால் அது அழிந்து விடும்; அதைவிட்டு விட்டால் மறுபடியும் சூரனாகி உலகிற்குத் துன்பம் விளைவிக்கும். 'நாதவிந்து கலாதி நமோ நம' என்பது திருப்புகழ். நாதம்—கோழி, விந்து-மயில், 'விந்துவெனும் தடமா மயிலூர்' என்று திருப்போரூர்ச் சந்நிதி முறை கூறுகிறது. மயிலை ஓங்கார சொரூபமென்று திருப்புகழ் உரைக்கிறது.

ஊர், பேர், குணம் குறி இவைகள் இல்லாத பரம்பொருளுக்கு அவைகளைவிட்டு வழங்குவது நம் பொருட்டேதான்.

சுப்ரமண்யம் என்பது முருகனுக்குரிய பல பெயர்களில் ஒன்று. ஸு ஆனந்தம், ப்ரஹ்ம-பரவஸ்து, ந்ய-(ண்யம்) அதனின்றும் உதித்துப் பிரகாசிப்பது. முருகன் இன்பமும் ஒளியும், வடிவமாக உடையவன் என்பது. வேதங்களும் அப்பெயரை முறையிடுகின்றன. 'முக்கனல் சூழ் வேள்வியிற் சுப்பிரமணியன் ஓம் எனவும் முக்காற் கூறும்' என்பது காஞ்சிப் புராணம்.

சரவணபவன் என்பது நாணல் சூழ்ந்த பொய்கையில் தோன்றியவன் என்று பொருள்படும். சரம்-நாணல், வநம்-நீர் இன்னும், ஸ்=மங்களம்

## பகவானின் அர்ச்சனை மூர்த்திகள்

| | | |
|---|---|---|
| 1. சைலீ | : | கற்சிலை வடிவம். |
| 2. தாருமயீ | : | மரத்தாலான பிரதிமை |
| 3. லௌஹீ | : | உலோக விக்ரகம் |
| 4. லேப்யா | : | மெழுகினால் உருவான மூர்த்தம் |
| 5. லேக்யா | : | ஓவிய வடிவம் |
| 6. ஸைகதீ | : | மண்படிவம் |
| 7. மனோமயி | : | மானசீகமான ரூபம் |
| 8. மணிமயீ | : | நவரத்தினங்களில் ஒன்றால் உருவாக்கிக் கொண்டது. |

பகவானின் அர்ச்சனை மூர்த்திகள் உலகில் உள்ள எல்லாம் பொருள்களிலும் இருந்தாலும், சாஸ்திர விதிப்படி இந்தஎட்டு மூர்த்திகளை மட்டுமே முக்கியமானதாகக் கருதுகிறார்கள்.

தொகுத்தவர் : கமலா மாரியப்பன்

ர,-ஒளி, கொடை, வ-சாத்துவிகம், ந-போர், பவன்-உதித்தவன் என்ற பொருளில் மங்களம், ஒளி, கொடை, சாத்துவிகம், வீரம் என்ற சிறப்பியல்புகளுடன் தோன்றியவன் என்றும் ஆன்றோர் கூறுவர்.

கந்தன்: ஸ்கந்தம் (தோள்) என்ற சொல்லால் வலிமையுடையவன் என்ற பொருள் உடையது. கச்சியப்ப சிவாசாரியார்,

" சேயவன் வடிவம் ஆறும்
திரட்டி ஒன்றாய்ச் செய்தாய்
ஆயதனாலே கந்தனும்
எனும் நாமம் பெற்றான்."

என்றும்,

" அந்தம இல்லதோர்
மூவிரு வடிவு மொன்றாகிக்
கந்தன் என்று பேர்
பெற்றனன் கவுரிதன் குமரன்"

என்று பெயர்க் காரணத்தை விளக்கியிருக்கின்றார். கந்து என்றால் நடுவில் இருப்பது இறைவனுக்கும் தேவிக்கும் நடுவில் சோமாஸ் கந்தராக இருப்பது. 'இரவொடு பகலுக்கும் நடுவாய் மாலையான தொன்றழிவின்றி வைகுமாறாக்கும், பாலனாகிய குமரவேள் நடுவுறும் பான்மை' என்பதன் நயம் தெரிந்து இன்புறற்பாலது.

கார்த்திகேயன்: கார்த்திகைப் பெண்கள் அறுவர் வளர்த்ததால் ஏற்பட்ட பெயர். ஐம்புல அறிவுகளும், மனமாகிய அறிவும் சேர்ந்து ஆறறிவுகளால் அவனைக் காண வேண்டும் என்ற தத்துவத்தைக் குறிக்கும். இதன் காரணமாக கார்த்திகை நட்சத்திரத்தன்று விரதமிருக்கிறோம்.

காங்கேயன்: கங்கையில் வளர்ந்ததால் உண்டான திருநாமம்.

குமாரன்: கு - குற்சிதம், அருவருப்பு, மாரன்-நாசம் செய்பவன் என்று பொருள்படும்.

குகன்: மனமாகிய குகையில் இருப்பவன்; தகராசத்தில் வதிபவன்; அடியார் மனக்கோயிலில் தங்குபவன்.

விசாகன்: வி-பட்சி, சாகன்-சஞ்சரிக்கின்றவன் மயிலை ஊர்தியாகக் கொண்டவன். விசாக நட்சத்திரத்தில் தோன்றியவன் என்பதும் ஆம். வைகாசி விசாகத்தில் முருகப்பெருமானுக்கு விழாக்கொண்டாடுவது இதனாலேயே.

செவ்வேள்: செம்மை நிறத்தவன்; சிவந்த ஆடையன்; கருவேள் என்பது மன்மதனுக்குரிய பெயர் என்பது குறிக்கத் தக்கது. ஞான பண்டிதன், சுவாமிநாதன், தேவ சேனாபதி என்பன போன்ற பல திருநாமங்களும் முருகனுக்குண்டு.

தொல்காப்பியர் காலத்திற்கு முற்பட்டே தமிழ்நாட்டில் முருக வழிபாடு இருந்து வந்திருக்கிறது. 'சேயோன் மேய மைவரை உலகம்' என்று குறிஞ்சி (மலை) நிலக்கடவுளாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஓங்காரத்துள்ளே ஒளியாகவும், ஆன்மாவிற்குள்ளே அறிவாகவும் உள்ள அழகனே முருகன். கண்ணனையும், முருகனையும் குழந்தைகளாகவே நம் நாட்டில் வணங்கி வருகிறோம். 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்' என்பது பழமொழி. 'அச்சிறு முருகனை', என்பர் அருணகிரிநாதர். 'குழந்தை முருகேசனை', 'குழந்தை வேல்' என்பனவும் இதை வலியுறுத்தும். குழந்தை கேட்டதெல்லாம் கொடுக்கும். சிவபெருமானுக்கும் பிரணவ உபதேசம் செய்து தகப்பன் சுவாமி ஆயினன். 'கோல மாமஞ்ஞை தன்னில் குலவிய குமரன் தன்னைப் பாலன் என்றிருந்தேன் அந்நாள் பரிசிவை யுணர்ந்திலேன் யான்' என்று சூரபதுமன் வருந்திக் கூறுகிறான். சங்கப் புலவர் ஒருவர் 'பொன்னும் பொருளும் போகமும் நின்பால் வேண்டவில்லை; அன்பும் அறமும், அருளும் வேண்டும்.' என்று விண்ணப்பித்து இருப்பது போற்றத் தக்கது.

முருகனை வழிபடுவதற்குரிய கிழமை வெள்ளி; நட்சத்திரம் கிருத்திகை; திதி சஷ்டி. 'குக்குடத்தைப் பிடித்தவன் சட்டியை நோக்கக் குறை வில்லையே' என்றும், 'சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும்' என்றும் கூறப்படுவதெல்லாம் கந்த சஷ்டி விரதத்தை குறிப்பவையே. இத்தகைய மகிமை வாய்ந்த முருகன் முத்தமிழால் வைதாரையும் வாழ வைப்பவன்; இகபர சவுக்கியம் அருள்பவன்; சகல செல்வ யோக மிக்க பெரு வாழ்வு கொடுப்பவன்; முருகா என ஓர் தரம் ஓதுஅடியார் முடி மேல் இணைதாள் வைப்பவன்.

முருகா எனஉனை ஓதும்தவத்தினர்
மூதுலகில்
அருகாத செல்வம் அடைவார் வியாதி
அடைந்து நையார்
ஒருகால முந்துன்பம் எய்தார் பரகதி
யுற்றிடுவார்
பொருகாலன் நாடுபுகார்சம ராபுரிப்
புண்ணியனே.

—சிதம்பர சுவாமிகள்.



# முப்பொருள் - வேதம் - உபநிடதம் - கீதை

மானுடம் உலகை, உலக சக்திகளை, சக்திகளின் மூலத்தைப் படிப்படியே வழிபடலாயிற்று. இவ்வழிபாடு காலப்போக்கில் சமயமாக உருவாயிற்று எனலாம். சூரியனையும் அதன் கதிர்களையும் எங்ஙனம் பிரித்தற்கு இயலாதோ அதுபோன்று மனிதனையும் சமயத்தையும் பிரித்தற்கு இயலாது. சமயம் என்பது சடங்குகளோடு கூடிய தத்துவத்தைக் குறிக்கும். மேலை நாடுகளில் சமயம் வேறாகவும் தத்துவம் வேறாகவும் உள்ளன. ஆனால் இந்தியாவில் அவையிரண்டும் இணைந்த நிலையிலேயே காணப்பெறுகின்றன.

தமிழிலும் மெய்ஞ்ஞானத்தோடு கூடிய சடங்குகளைச் 'சமயம்' என்ற பெயரில் கூறுகின்றனர். இச்சொல் தமிழில் எவ்வாறு தோன்றியிருக்கக் கூடும் என்றும் சில ஆய்வாளர்கள் பின்வருமாறு அறுதியிடுகின்றனர்.

திரு. கோவி. நரசிம்மன், எம்.ஏ.,
**திருப்பதி.**

சமயம் என்ற சொல் 'சமை' என்பதிலிருந்து தோன்றியிருக்க வேண்டும். 'சமை' என்பதற்கு 'ஒழுங்குப்படுத்து' என்று பொருள். ஒழுங்குப்படுத்தப்பட்டு நன்முறையில் வளர்ச்சியடைந்த தெய்வ நம்பிக்கையே சமயமாகும் என்று திரு. பி. ஜெயா அவர்களும், 'சமையம்' என்னும் சொல்லே சமயம் என்றாயிற்று என மொழி ஞாயிறு தேவநேயப் பாவணர் அவர்களும் கூறுகின்றனர். சமைத்தல் என்னும் தொழிற் பெயரின் பகுதியே சமை என்பது. சமை என்பதற்குப் 'பக்குவப்படுத்து' என்று பொருள்.

திரு. அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள் சமைக்கப்பட்டதுதான் சமயம், மனிதன் தன் வாழ்வு வளம்பெறவும், மாக்கள் தன்மையிலிருந்து விடுதலை பெற்று மக்கள் தன்மை பெறவும் வழியாகச் செய்யப்பட்டது அல்லது சமைக்கப்பட்டதுதான் சமயம் என்கிறார்.

சமயத்தை ஆங்கிலத்தில் 'ரிலிஜியன்' (Religion) எனக் கூறுகின்றனர். ரிலிஜியன் (Religion) என்ற ஆங்கிலச் சொல் ரிலிஜெரி(Relegere) அல்லது ரிலிகாரி (Relegare) என்ற சொல்லிருந்து பிறந்திருக்கலாம் என்றும், முன்னது 'திரும்பத்திரும்பப் படிக்கப்பட்டது' (to read again) என்ற பொருளையும் பின்னது கட்டுவது (to bind) என்ற பொருளையும் குறிக்கும்.

இவ்வாறு வரையறுத்துக் கூறப் பெறும் சமயம் எனும் மாளிகைக்கு மூன்று தூண்களாக அமைபவை கடவுள், உயிர், உலகம் என்பனவாகும். அவை பின்வருமாறு விளக்கப்பெற்றுப் பின் வேதம், உபநிடதம், கீதை ஆகியனவற்றில் அவை எவ்வாறு விளக்கப்பெற்றுள்ளன என்பது குறித்து இக்கட்டுரை அமைகின்றது.

**கடவுள் :**

உலகம் உண்டென்று கருதினால் அதனைப் படைத்தோன் ஒருவன் இருக்க வேண்டும். அவனே கடவுளாவான். கடவுளை ஒவ்வொரு மதத்தினரும் ஒவ்வொருவிதமாக அழைக்கின்றனர்.

கடவுள் என்னும் பதம் 'உள்ளத்தைக் கடந்து நிற்பவன்' எனப் பொதுவாகவும், தொழில் ஆகுபெயராய் அமைந்து மனம், மொழி, மெய்களைக் கடந்த பரம்பொருளை உணர்த்துகிறது எனச் சிறப்பாகவும் பொருள் கூறுவர். இச்சொல் தொல்காப்பியத்தில் அமரர், முனிவர் முதலிய உயர்ந்தோர் என்னும் பொருளில் வழங்கி உள்ளது.

இந்து சமயத்தில் கடவுளர் மனிதனைப் போன்ற உருவம் பெற்று விளங்குகின்றனர். கடவுள் கறையோ குறையோ இல்லாதவர்; நிறைவு உடையவர்; நிலைபெற்றவர். கடவுள் எனப்படுவது மனத்தினால் ஏற்படுத்தப்பட்ட ஒரு வெறும் கருத்தே என்றோ ஒன்றுமின்மையே என்றோ கூடச் சிலர் கூறுகின்றனர். அது ஒரு குருட்டு நம்பிக்கையன்று. ஒவ்வொருவனும் ஆர்வத்துடன் இறைவனை நாடினால் அவனால் கடவுளை நேருக்கு நேர் காண இயலும்.

கடவுளின் இயல்பைப் பலவாறு கூறுகின்றனர். அவ்வியல்புகள் அவரின் இருத்தலையும், தன்மைகளையும், பண்புகளையும் விளக்குவனவாக உள்ளன. இவ்வுலகத்தை ஆக்குபவராகவோ அன்றி வெறுமனே இருப்பவராகவோ விளங்குகின்றார். வரையறை உள்ளவராகவும் வரையறையற்றவராகவும் விளங்குகிறார்.

**உயிர் :**

உயிர், சீவன், ஆன்மா, முதலியன ஒரு பொருள் குறித்தப் பல சொற்களாகும். சுபக்கூறுகளில் இது இரண்டாவதாக இடம் பெறுகிறது. ஈண்டு ஆன்மா என்ற சொல்லையே நாம் எடுத்துக்கொள்வோம். 'ஆத்மா' என்பது 'உயிர்ப்பது' என்னும் பொருளுடைய 'அன்' என்னும் வேர்ச்சொல்லிலிருந்துபிறந்ததாகும். அதனால் அது உயிர் என்னும் பொருளுடைய பிராணன் என்னும் சொல்லுடன் சம்பந்தம் உடையது. ஆத்மா என்னும் சம்ஸ்கிருத பதந்தான் தமிழில் ஆன்மா என வழங்கப்பெறுகின்றது. இந்த மொழி இருக்கு வேதத்தில் சுமார் முப்பது முறை பல

பொருள்களில் வழங்கப்பெற்றுள்ளது.

இவ்வான்மா, பிரகிருதி மற்றும் அதன் இருபத்து மூன்று கூறுகள் ஆகியவற்றாலான உடலிலிருந்து வேறானது. பஞ்சபூதங்கள் எனப்படும் நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் என்னும் ஐம்பொருள்களினால் ஆகியுள்ள பருவுடலிலிருந்து அது தனிப்பட்டது.

ஆன்மா சரீரத்தில் கட்டுண்டு கிடக்கின்றது. அது எதைப்போன்றது என்றால் தானாகவே தந்தைக்குரிய அரியணையிலிருந்து விலகிக்கொண்டு காட்டிலுள்ள வேடுவர்களுடன் சேர்ந்து, வேட்டுவப் பெண் ஒருத்தியை மணந்து அவர்களோடு கூடிக் குழந்தைகளைப் பெற்று காட்டுமிராண்டித்தனமான வாழ்க்கையில் சிக்கி உழலும் அரச குமாரனைப் போன்றது.

ஜீவன் அல்லது ஆன்மாவின் மறுபிறப்பு, ஜீவன்கள் வேறு உடலினுள் புகுதல், இவைபற்றிய விதிகள் கர்மம் அல்லது வினையிலிருந்து தொடரும் பின் விளைவுகளே. எந்தக் குழந்தையும் ஒன்றுமில்லாததிலிருந்து பிறப்பதில்லை. ஒன்றுமில்லாத மனத்துடனும் அது மாறுவதில்லை. பெற்றோரிடமிருந்தே அது பரிணமித்து விடுவதில்லை. குறிப்பிட்ட சில முந்தைய பற்றுக்களுடனேயே ஒவ்வொரு குழந்தையும் பிறக்கின்றது. ஒருவன் இறக்கும்போது பருவுடல் மட்டுமே அழிந்துபோகிறது. ஆன்மாவின் நுண்ணுடல் அதன் வினையின் விளைவுகள் அனைத்தையும் தன்னுள் வைத்துக் கொண்டு எஞ்சுகிறது. பின்னர், ஆன்மா தனது முன்வினைக்கேற்ப ஒரு புதிய உடலை ஏற்றுமீண்டும் பிறக்கின்றது. எங்ஙனம் ஒருவன்கிழிந்துபோன உடைகளைக் களைந்துவிட்டு, புதிய உடைகளை அணிந்து கொள்கிறானோ அங்ஙனமே ஆன்மாவும் தனது நைந்துபோன உடல்களை நீக்கிவிட்டுப் புதிய உடல்களை ஏற்கின்றது. எவ்வாறு ஒருவனின் வாழ்வில் குழந்தைப் பருவம் முதல் முதுமைப் பருவம் ஈறாகத் தொடர்ச்சியும் அவனுக்கே உரித்தான தனித்தன்மையும் இருக்கின்றனவோ? அவ்வாறே பல்வேறு பிறப்புக்கள் ஏற்பட்டாலும், தனித்தன்மை இருப்பதற்குக் காரணம் ஆன்மா அழிவற்றதாக அல்லது நித்தியமானதாக இருப்பதேயாகும்.

மேலும், உடல் அழிந்த பின்பு, இறைவனுடன் கலப்பதாகவும், வேறோர் உலகத்தில் இருப்பதாகவும் நிலைபெற்று இருப்பதுமான தன்மைகளைக்கொண்டு ஆன்மா விளங்குகின்றது.

**உலகம் :**

உலகம் என்பதைத் தத்துவியலில் 'பிரபஞ்சம்' எனவும் வழங்குவர். இதனை ஆங்கிலத்தில் (cosmos) எனக் குறிப்பிடுகின்றனர். இதன் பொருள் 'ஒழுங்குக்கு உட்பட்டது' என்பதாகும். இவ்வுலகம் இறைவனின் அருளால் தோன்றியது. இதில் உயிர், உயிரற்ற சடப்பொருள்கள் ஆகிய இரு பொருள்கள் உள்ளன. இதற்கு பிரகிருதி, அசித்து முதலிய பெயர்களுள. உலகம் என்பது வீடுகள், மரங்கள், மலைகள் முதலியவை போன்ற உலகிலுள்ள பொருட்கள் அனைத்தையும் குறிக்கும். வானம், சூரியன், சந்திரன், நட்சத்திரம் ஆகியனவும் இதில் அடங்கும்.

விஞ்ஞானி இயற்கைத் தோற்றங்கள் அனைத்தையும் நுணுகி ஆராய்வதில் ஈடுபாடு கொண்டிருக்கிறான். இரசாயினி உலகை ஆக்கும் உலோகங்களையும் அலோகங்களையும் அறிய முற்படுகிறான். வானவியலறிஞனோ சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் முதலிய விண் பொருள்களின் இயல்பை ஆராய்கிறான். உயிரியலறிஞன் உயிரின் இயல்பைப் புரிந்து கொள்ள விழைகிறான். சமயவாதியோ ஆன்மாவினின்றும் கடவுளினின்றும் இயற்கை எங்ஙனம் மாறுபட்டது என்பதை அறிய ஆர்வம் கொள்கிறான். அவனது அடிப்படையான நோக்கம் உலகைப் படைத்த கடவுளைப் பற்றிய அறிவை அடைவதே ஆகும்.

உலகை நாம் மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்புலன்களால் அறிந்து கொள்கிறோம். எடுத்துக்காட்டாக ஒரு ரோஜா மலரைப் பற்றிய அறிவினைப் பெறும்போது அதன் சிவப்பு நிறத்தைக் கண்ணால் பார்க்கிறோம். செடியிலிருந்து அதைக் கையினால் பறிக்கிறோம். அதன் மணத்தை மூக்கினால் முகர்கிறோம். அதன் இனிப்புச் சுவையை நாவினால் சுவைக்கிறோம். அவ்வாறே இயற்கையில் இருக்கும் மரங்கள், வீடுகள், ஏரிகள், ஆறுகள், மலைகள் போன்ற ஏனையவைக் குறித்தும் அறிந்து கொள்கிறோம்.

இம் முப்பொருள்களை சைவம், வைணவம் முதலிய மதங்கள் ஏற்றுக் கொள்கின்றன. சாங்கியம் போன்ற மதங்கள் ஆன்மா, உலகம் ஆகிய இரு பொருட்களை மட்டுமே ஏற்றுக் கொள்கின்றன. 'உலகம்' மட்டுமே உள்ள பொருள் பிற எதுவும் உலகில்லை என்கின்றனர் உலகாயதர்.

இந்தியச் சமயங்களுக்கு அடிப்படையாக அமைவன வேதம், உபநிடதம், கீதை என்பனவாகும். இம் மூன்றிலும் முப்பொருள் பற்றிய கருத்துக்கள் எவ்வாறு அமைந்துள்ளன என்று விளக்கப்படுகின்றது.

**வேதம் :**

வேதம் 'வித்' என்னும் வடமொழிச் சொல்லடியிலிருந்து தோன்றியது. 'வித்' என்பதற்கு அறிவு என்று பொருள். வேதங்கள் என்பதற்கு 'அறிவு நூல்கள்' எனப் பொருளாகும். உலகில் தெரிந்து கொள்ளமுடியாதவற்றைத் தெரிந்து கொள்ளும் அறிவிற்குதான் 'வேதங்கள்' எனக் கூறலாம். வேதத்தில் கடவுள், உயிர், உலகம் ஆகிய மூன்றைப்பற்றிய கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன.

**கடவுள் :**

வேதங்களில்காணப்பெறும் மந்திரங்களுள் இயற்கையின்பகுதிகளாகிய நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகியவற்றைத் தெய்வங்களாக்கி அவற்றுக்குச் செலுத்தும் வழிபாடுகளாகவே பெரும்பாலும் காணப்பெறுகின்றன. தெய்வங்கள் எல்லாவற்றையும் ஒவ்வொரு பிரிவும் பதினொன்று கொண்ட மூன்று பிரிவுக்குள் அடக்கப்பெற்றுள்ளது. அவை,

1. விண்ணுக்குரியவை—வருணன், மித்திரன் முதலியன.
2. மண்ணுக்குரியவை—அக்கினி முதலியன.
3. வாயுமண்டலத்திற்குரியவை—இந்திரன், வாயு, முதலியன.

மேற்கூறியவற்றிலிருந்து வேதங்களிலே முதன்முதலில் பல தெய்வ வழிபாடுகள் குறித்துப் பேசப்பட்டுள்ளன. இதனை ஆங்கிலத்தில் 'பாலிதீயிசம்' (polytheism) என்பர். இந்தப் பல தெய்வ வழிபாடு காலத்தால் முற்பட்ட மந்திரங்களில்தான் காணப்படுகின்றன. படிப்படியாக இக்கொள்கை வளர்ச்சியடைந்து இறுதியாக ஒரேயொரு தெய்வமே உண்டு என்ற கொள்கை வலுப்பெற்றது. இதனை 'மோனோதீயிசம்' (monnotheism) என்பர். வேதத்தில் விஸ்வகர்மன், பிரஜாபதி ஆகிய இரு பெயர்கள் குறிக்கப்படுகின்றன. இரு பெயர்களும் குறிப்பது ஒரு தெய்வத்தைத்தான். 'விஸ்வகர்மன்' என்ற சொல்லுக்கு 'எல்லாவற்றையும்செய்யவல்லவன்'என்றும் 'பிரஜாபதி' என்ற சொல்லுக்குப் 'பிரஜைகளுக்குத்தலைவன்' என்றும் பொருள்.

காட்டாக, வேதத்தில் ஓரிடத்தில் நாங்கள் எங்கள் பலியை எத்தெய்வத்திற்கு இடுவோம்? என்ற கேள்வி ஒன்பது முறை கேட்கப்பட்டதாயும், பிரஜாபதியே எல்லாவற்றுக்கும் தலைமையானவன்; அவனுக்கே பலியை இடக்கடவோம் என்று பதில் கொடுக்கப்பட்டதாயும் குறிப்பு உள்ளது.

**உயிர்:**

ஒவ்வோர் உடலுள்ளும் ஆன்மா உண்டு. நமது கண்ணுக்குப் புலனாகவிடினும் அத்தகைய ஆன்மாக்கள் உண்டு என்பது நிச்சயம்; அவை நித்யமானவை. உடல் அழியும்போது ஆன்மா அழிவதில்லை. மேலும் ஒருவன் இறந்ததும் அவனுடைய ஆன்மா அவன் செய்த நல்வினை, தீவினைகளுக்குத்தக மோட்ச லோகத்துக்கோ நரக லோகத்துக்கோ செல்லும் என்னும் கருத்து வேதத்தில் குறிக்கப்பெற்றுள்ளது. ஆன்மாவுக்கு மறு பிறப்பு உண்டா? இல்லையா? என்பது குறித்து வெளிப்படையாகக் குறிக்கப் பெறவில்லை.

**உலகம் :**

தண்ணீர்தான் மூலப்பொருள். அதிலிருந்துதான் ஒன்றிலிருந்து ஒன்றாக ஏனைய பஞ்சபூதங்களும் அவற்றாலாய இந்த உலகமும் உற்பத்தியாயின. அறிவுடைய ஒருவனே இந்த உலகத்துக்குக் காரணமானவன் என்பது வேதங்களின் கருத்து.

**உபநிடதம் :**

இது வேதத்தின் இறுதியாக விளங்குகின்றது. வேதத்தின் இறுதியான பொருள்களைப்பற்றிக் கூறுவதால் இதற்கு வேதாந்தங்கள் என்ற பெயரும் உண்டு. உபநிடதம் என்ற சொல்லுக்குக் 'கிட்ட இருத்தல்' என்று பொருள். மிகச் சமீபத்தில் இருந்த சீடனுக்குக் குரு உபதேசித்த மொழிகளே உபநிடதங்களாகும்.

உபநிடதங்கள் கூறும் அனைத்துச் செய்திகளையும் இரண்டனுள் அடக்கலாம். ஒன்று நம்முள் நின்று நம்மை இயக்கும் சக்தி, மற்றது நமக்கு வெளியே நம் புலன்களுக்கு விஷயமாய் இருக்கும் புறவுலகும் அதன் அடிப்படையும் ஆகும். ஒன்று அகவுலகு; மற்றொன்று புறவுலகு. ஒன்று ஆன்மா மற்றது பிரம்மமாகும்.

**ஆன்மா :**

இந்திரனும் விரோசனனும் பிரஜாபதியிடம் சென்று "ஐயனே, 'மூப்பு, மரணம், சோகம், பசி, தாகம் இவைகளில்யாதும் தீண்டப்பெறாத ஆன்மா என்ற ஒன்று உண்டென்றும் அதுவே அறியத்தக்கதும் அடையத்தக்கதுமான பொருள். அதை ஒருவன் அடைந்துவிட்டால் எல்லாப் பதங்களும் பேரின்பங்களும் அடைவான்' - என்றும் தாங்கள் சொன்னதாகப் பேசிக் கொள்கிறார்கள் அதைக் காணவந்தோம்" என்றும் கூறினர். அதைக்கேட்ட பிரஜாபதி 'சரீரமே ஆன்மா' எனக் கூறினார். அசுரர் பிரதிநிதியாகிய விரோசனன் அந்த விடையோடு திருப்தி அடைந்து சரீரத்தைப் பூசிக்கத் தொடங்கினான். தேவர் பிரதிநிதியாகிய இந்திரன் அந்த விடையில் திருப்தி காணாது மேலும் வினவ, ஈற்றில் பிரஜாபதி 'வண்டியில் கட்டிய குதிரைபோல் ஆன்மா சரீரத்தில் கட்டுப்பட்டு நிற்கிறது. காண்பது கண் அல்ல. கண்ணைக் கருவியாகக் கொண்டு காண்பது ஆன்மா. இவ்வாறு உடலினின்றும் இந்திரியங்களினின்றும் வேறான பொருள் ஆன்மா. சரீரம் வேறு' ஆன்மா வேறு என்று விடை கூறியதாகவும் குறிப்பு உள்ளது.

ஆன்மா பல கவசங்களால் மூடப்பெற்றுள்ளது. கவசம் அல்லது கோசம் என்ற சொல்லிற்கு 'உறை' என்று பொருள். முதலில் புறத்தேயுள்ள கோசமே இவ்வுலகமாகும். இது உணவினால் ஆய காரணத்தினால் அன்னமய கோசம் என்று பெயர். இதற்கு உள்ளே பிராணமய கோசமும் அதற்குள்ளே மனோமய கோசமும் அதற்குமுள்ளேஆனந்தமய கோசமும் உறையாக அமைந்துள்ளன. இவற்றுக்கெல்லாம் உள்ளே ஆன்மா நித்தியமாய் விளங்குகின்றது.




**பிரம்மம் (இறை):**

பிரம்மம் என்பது 'பிரஹ்' என்னும் வினையடியாகப் பிறந்தது. 'பிரஹ்' என்பதற்கு 'வளர்' என்பது கருத்து. பிரம்மம் தன்னிலிருந்து இந்த உலகம் முழுவதும் வளர்வதற்கு காரணமாயுள்ளது. அதனால் அதற்கு அப்பெயர் ஏற்படலாயிற்று.







ஆத்மாவுக்கு உடல் எப்படியோ அப்படியே பிரம்மத்துக்கு இப்பிரபஞ்சமும் உடலாகும் என்று குறிக்கும் வசனங்கள் உபநிடதத்திலே காணப்படுகின்றன.

விண் பிரமத்தின் தலை; சூரிய சந்திரர்கள் அதனிரு கண்கள்; திக்குகள் அதன் செவிகள்; வேதம் அதனுடைய வாக்கு; காற்று அதனுடைய மூச்சு என இவ்வாறு உபநிடதம் கூறுகிறது.

சிலந்திப் பூச்சி தன்னிலிருந்து நூலை உண்டாக்கி அதைப் பற்றிக் கொண்டு நிற்கிறது. அதைப்போலவும் பூமியிலிருந்து செடிகள் உண்டாவது போலவும் உலகம் யாவும் அப்பிரம்மத்திலிருந்து உண்டானவை.

காட்டாக, நுண்ணிதான ஆலம் வித்திலிருந்து கிளைகளும், இலைகளும், விழுதுகளும் கொண்ட பெரிய மரம் உண்டாவது போல என்றும் உலகம் முழுவதும் பரவியிருக்கும் இப்பரம்பொருள் மறைந்து இருப்பது எங்ஙனம் என்பதற்குத் தண்ணீருக்குள் கரைந்த உப்பு கண்ணிற்குப் புலப்படாதபோதும் அதன் இயல்பு தண்ணீர் முழுவதும் செறிந்திருப்பது போலத் தோன்றும் என்று உவமைகள் மூலம் விளக்கப்பெறுகின்றன.

**கீதை :**

மகாபாரதப் போரிலே துரியோதனாதியரை எதிர்த்துப் போர் செய்வதற்கு வந்த அர்ச்சுனன் எதிர்க்கட்சியிலேயே நின்ற தனது உறவினர்களையும் ஆசிரியரையும் எதிர்த்து எவ்வாறு போர்புரிவது என மனங்கலங்கினான். அப்போது கண்ணன் 'உலகமும் உலகத்து உயிர்களும் நானே' எனப் பார்த்தனுக்குக் கூறினான். அவ்வுபதேசமே கீதை எனப்படும். இது மகாபாரத பீஷ்ம பருவத்தில் இடம் பெற்றுள்ளது.

பகவத் கீதையிலே கூறும் கருத்துக்களை நான்கு வகையாகப் பிரித்துக் கூறலாம். 1. துக்கம், 2. துக்க நிவாரணம், 3. துக்க உற்பத்தி 4. துக்க உற்பத்தி நிவாரண மார்க்கம் என்பனவாகும். அர்ச்சுனனுக்கு ஏற்பட்டது ஒருவித துக்கம். அவன் நாடியது அத்துக்கத்துக்கு நிவாரணம். அச்சமயம் அவன் தேருக்குச் சாரதியாக இருந்த பகவான் துக்கம் எதிலிருந்து உற்பத்தியாகின்றது என்பதையும் அதற்கு நிவாரணம் மார்க்கம் என்ன என்பதையும் விளக்கினார்.



# திருமலைக்கேணி

மலைப்பாறைகளின் இடையிலிருந்து ஓடிவரும் இயற்கை நீரூற்றில் குளிப்பதென்றால் சிறுவர், பெரியவர் யாருக்கும் அது மகிழ்ச்சிதானே! அதுவும் இயற்கை மூலிகைகளும், வேர்களும் நிறைந்த மலைப்பாறைகளின் இடையிலிருந்து ஊற்றெடுக்கும் சுனை நீர் என்றால் அது உடலுக்கும் உள்ளத்திற்கும் உற்சாகம் அளிக்குமே!

கடல் மட்டத்திலிருந்து 1200 அடிக்கும் உயரமான இடம். சுற்று வட்டாரம் முழுவதும் மரங்கள் அடர்ந்த குன்றுகள், பச்சைப்பசேல் என்று கண்ணுக்கு விருந்தளிக்குமிடம் அது. ஒரு மலைக்குன்றுக்கும் மற்றொரு மலைக்குன்றுக்கும் இடைப்பட்ட பள்ளங்களில் தெளிந்து தேங்கி நிற்கும் நீர்த்தகடுகள்.

**சேலம் பா. அன்பரசு,**
**சேலம்**

குன்றுகள் சூழ்ந்து இயற்கை வளம் நிறைந்து ஒரு பள்ளமான இடத்திலிருப்பதுதான் திருமலைக் கிணறு என்று அழைக்கப்படும் திருமலைக் கேணி என்னுமிடம். மேலே குறிப்பிட்ட நீரூற்றும் முருகன் கோயிலும் இங்குதான் உள்ளன.

திருமலைக்கேணி திண்டுக்கல்லிலிருந்து 27 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. திண்டுக்கல் பேருந்து நிலையத்திலிருந்து செந்துறை செல்லும் பேருந்து அல்லது 2-ஆம் எண்ணுள்ள உள்ளூர்ப் பேருந்திலும் பயணம் செய்து திருமலைக்கேணியை அடையலாம்.

பேருந்து திண்டுக்கல் நகரைக் கடந்து வடகிழக்குத் திசையை நோக்கிப் பயணம் செய்து கொண்டிருந்தது. கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஒரே பொட்டல் காடாகக் காட்சி அளித்தது நிலம். அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிற்றூர்கள்.

திண்டுக்கல்லில் அனலாகக் கொளுத்திக் கொண்டிருந்த வெயில் இப்போது போன இடம் தெரியவில்லை. மழைத்தூறல் ஆரம்பமாகி விட்டது. சில இடங்களில் மழை பெய்து ஓய்ந்து பள்ளங்களில் நீர் நிறைந்து காணப்பட்டது. நிலமும் நன்றாக நீர் ஊறி இருந்தது.

சரி, திருமலைக்கேணியில் இறங்கி பார்க்க வேண்டிய இடத்தை இம் மழையில் பார்த்தது போலத்தான் என்று எங்களையே நொந்து கொண்டோம்.

வழியில் கம்பிளியம் பட்டியிலிருந்து ஒரு திருப்பம். கம்பிளியம்பட்டி என்று ஏன் அந்த ஊருக்குப் பெயர் வைத்தார்கள் என்று அப்போது தான் புரிந்தது. அங்கு வீசிய குளிர்தான் காரணமாக இருக்க முடியும். அந்த நேரத்தில் நமக்கும் ஒரு கம்பளி தேவையாகத்தான் இருந்தது.

மலைப்பகுதிக்குச் செல்லும் பாதை வழியே பேருந்து பயணம் செய்து கொண்டிருந்தது. மேடு பள்ளங்கள், பாதை வளைவுகள் மலைச் சரிவுகளில் இருந்து ஓடி வந்து நீர் தேங்கி நிற்பதற்காகவே இயற்கை படைத்த பள்ளங்கள். அதில் நிற்கும் நீர்த் தகடுகள், அத்தனையும் இயற்கையின் திருவோலக்கமாகவே காட்சி தந்தன.

சிறிது தூரம் கடந்ததும் 'சிலுவத்தூர்' என்னும் சிற்றூர் குறுக்கிடுகிறது. பெயருக்கு ஏற்றார் போலவே சிலுவைகள் நடப்பட்ட எண்ணற்ற கல்லறைகள் சாலை ஓரத்தில் காணப்படுகின்றன. ஊரின் பெயர்க் காரணம் விளங்குகிறது. சுமார் 150 ஆண்டுகள் பழமையுடைய சர்ச்சு ஒன்றும் காணப்படுகிறது.

பேருந்து இப்போது சரிவான மலைப்பாதையில் போய்க் கொண்டிருந்தது. பேருந்து சன்னல் வழியாகத் தாழ்வான நிலப்பகுதியை



விநாயகர் கோயிலும், முருகன் கோயிலும் திருமலைக்கேணி

பார்க்கிறோம். அத்தனையும் எழில் கோலம்.

"திருமலைக்கேணி இறங்குங்க" பேருந்து நடத்துநர் குரல் கேட்டு சுயநினைவு பெறுகிறோம். இறங்க வேண்டிய இடம் அதுதான் என்பது அப்போதுதான் நம்மால் உணர முடிகிறது.

பேருந்து செல்லும் மலைப்பாதையிலிருந்து வலது பக்கம் செல்லும் பிரிவுப் பாதையில் இறங்கி நடக்கிறோம். இறக்கமான பாதை சுற்றிலும் மலைச்சரிவு. இடைப்பட்ட பகுதி பெரிய பள்ளத்தாக்கு. அங்குதான் திருமலைக்கேணி சஞ்சீவி (தீர்த்தம்) சுனையும், சுப்பிரமணிய சுவாமி கோயிலும் அமைந்துள்ளன.

முருகன் கோயில்களுக்குப் பெரும்பாலும் மலையேறிச் செல்ல வேண்டியிருக்கும். ஆனால் திருமலைக்கேணி முருகன் கோயிலுக்கோ மலைச்சரிவில் இறங்கிச் செல்ல வேண்டும்.

மலைச்சரிவுகளில் சுதந்தரமாக விளையாடித் திரியும் மயில்கள் நம்மை வரவேற்கின்றன.

மலைச்சரிவில் மூன்றடி குறுக்களவுள்ள பள்ளத்தில் உள்ள நீர் ஊற்றுதான் 'வள்ளிச் சுனை' என்று அழைக்கப்படுகிறது. யாரும் அதில் துணி துவைப்பதோ வேறு செயல்களுக்கு; பயன்படுத்துவதோ கிடையாது. இந்த நீரூற்று நிலமட்டத்திற்குக் கீழேயே ஓடி அங்கிருந்து சுமார் 25 அடிக்குக் கீழே மலைச்சரிவிலுள்ள வேறிடத்தில் ஊற்றாகச் சுரக்கிறது.

இந்தச் சுனை தெய்வானை சுனை அல்லது முருகன் சுனை என்று அழைக்கப்படுகிறது. இதில் யாரும் இறங்கி அசுத்தப்படுத்தாமல் இருக்க இவ்வூற்றினைச் சுற்றிலும் இரும்புக் கம்பிப் போடப்பட்டுள்ளது. பயணிகள் தங்கள் வேண்டுதல்களை மனதில் நினைத்துக் கொண்டு நாணயங்களை இவ்வூற்றில் எறிகிறார்கள். நாணயத்தின் தலைப்பக்கம் மேலே தெரியும்படி நீரில் விழுந்தால் தங்கள் வேண்டுதல் நிறைவேறும் என்னும் நம்பிக்கையுடன் செல்லுகிறார்கள்.

'இவ்வூற்றின் வடக்குத் திசையில் சற்று உயரமான இடத்தில் அமைந்திருப்பது குழந்தைச் சாமி மற்றும் காமாட்சி மௌன குருசாமி ஆகிய சாமியார்களின் சமாதி. காமாட்சி மௌன குருசாமி தைப்பூசம் தோறும் இங்கு அன்னதானம் நடத்துவாராம். இரவு ஒரு மணிக்கு அன்னதானம் நடைபெறுவது வழக்கம். திருமலைக்கேணிக்கு பக்கத்திலுள்ள குரும்பப்பட்டி இவருக்குச் சொந்த ஊர். திடீரென்று வீட்டை விட்டு வெளியேறிய இவர் மீண்டும் ஊருக்குள் வரவில்லை. நாற்பத்தெட்டு நாள் யோக நிலையில் இருந்தாராம். ஒரு நாள் இவருக்கு வேர்த்துக் கொட்டியதாம்-இது வெள்ளைச்சாமி என்னும் சாமியார் தரும் தகவல்கள்.

குழந்தைச் சாமி இவருடைய சீடர். இவ்விருவரின் சமாதிகளும் தற்போது வெள்ளைச்சாமி என்னும் சாமியாரின் பராமரிப்பில் இருந்து வருகின்றன.

முருகன் சுனைக்குத் தெற்குப்பக்கம் கிழக்குப் பார்த்த நிலையில் திருப்பணி செய்யப்பட்டு புதுப்பொலிவுடன் காணப்படுவது சுப்பிரமணியர் கோயில். ஆண்டிக் கோலம். மூலவர் புதிதாக பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது. பழைய மூலவர் திருவுருவமும் அங்கு இருந்ததாம்.

இக்கோயில் திருப்பணி முடிந்து 20-3-81 அன்று கிருபானந்தவாரியார் அவர்களால் குடமுழுக்கு செய்து வைக்கப்பட்டது.

அருகிலுள்ள பழைய விநாயகர் கோயிலின் பழைய தூண்களில் கோயில் திருப்பணி செய்த பெருமகன் ஒருவனுடைய திருவுருவம் காணப்படுகிறது. மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த வரகுண பாண்டியருக்கும், வேறு பாண்டி மன்னருக்கும், இக்கோயிலுக்கும் தொடர்பு இருந்ததாகச் செவி வழிச் செய்திகள் வழங்கி வருகின்றன.

முருகன் சுனை இரும்புக் கம்பி போடப்பட்டிருப்பதாகக் குறிப்பிட்டோம். அதிலிருந்து குழாய் மூலம் தண்ணீர் வேறு ஒரு தொட்டிக்குக் கொண்டு செல்லப்பட்டுச் சுற்றிலும் குழாய்கள் வைக்கப்பட்டுள்ளன. பயணிகள் குளிப்பதற்காக இந்த ஏற்பாடு.

திருமலைக்கேணியிலிருந்து 4 மைல் தொலைவில் ஐயன் கோயிலும், அருவியும் இருக்கிறதாம்.

மாலை ஐந்து மணியாகிவிட்டது. கதிரவன் மேற்கு மலைகளில் புகலிடம் பெறுவதற்காக விரைந்து கொண்டிருந்தான். ஏற்கெனவே மழை பெய்து நிலம் நன்றாக ஊறிக் குளிர்ந்திருந்ததாலும், அது மலை வாழிடம் ஆகையினாலும் குளிர் நம்மை தந்தி அடிக்க வைத்தது.

கதிரவன் மேற்கு வானில் அப்போது தங்கத் தட்டாக மாறிக் கொண்டிருந்தான். வானம் ஆரஞ்சு வண்ணக் கலவையை அப்பிக்கொண்டு காட்சி தந்து கொண்டிருந்தது.

*



# ஆண்டாளும் ஆண்டவனும்

திருமலை திருவேங்கடவன் கோயி லில் வழிபாட்டு நுணுக்கங்கள் பல உள்ளன நூற்றுக்கணக்கான ஆண்டு களாக இவை அநுசரிக்கப்பட்டு வரு கின்றன. அவற்றின் உட்பொருள் என்னவோ பலருக்கு எளிதில் விளங்கு வதில்லை. ஆனால், சதாகாலமும் பெரு மாளைப் பற்றியும் அவருடைய லீலா விநோதங்களையும் மற்றும் அவற்றின் உட்பொருளையும் குறித்தும் சிந்தித்து வரும் மகனீயர்கள் கருணை கூர்ந்து அவற்றுக்கான விளக்கத்தை உள்ளு ணர்வின் வாயிலாக அறிந்து எடுத்துச் சொல்லும்போது அவ் விளக்கம் நம்மைப் புல்லரிக்கச் செய் கிறது என்பது மிகையன்று. அத் தகையதொரு அரிய விளக்கத்தை ஸ்ரீரங்கம் பெரியாச்ரமம் ஆண்டவன் ஸ்வாமிகளிடமிருந்து நான் தெரிந்து கொள்ளும் பேறு எனக்குக் கிடைத் தது. அவ்வினிய அநுபவத்தை ஸப்த கிரி வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ள ஆசைப்படுகிறேன்.

திருமலை திருவேங்கடவனுக்கு வெள்ளிக்கிழமை தோறும் அபிஷே கம் நடைபெற்று வருவது அனைவரும் அறிந்த தொன்ருகும். அப்போது அபிஷேகம் முடிந்த பிறகு திருமேனி யில் பொன்ருடை சமர்ப்பித்து பல் வேறு ஆபரணங்களைக் கொண்டு அலங்காரம் செய்யப்படும். இது முடியும்வரை எம்பெருமானின் திரு மார்பில் உள்ள லக்ஷ்மியை ஒரு தங்கக் குடத்தின்மேல் சாத்தி வைப் பது வழக்கம். அச்சமயம் சயன மண் டபக் கதவுகள் மூடப்பட்டு, அவ்வலங் காரம் ஏகாந்தமாக நடைபெறும். ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிகளும் அத்யாபக ஸ்வாமிகளும் சூடிக்கொடுத்த நாச்சி யார் ஆண்டாள் அருளிச் செய்த 'நாச்சியார் திருமொழி' பாசுரங்களை முழுவதும் சேவிப்பார்கள்.

திருக்காப்புகளைச் சாத்தி, திருவேங் கடமுடையானுக்கு அலங்காரம் செய் யும்போது பிரபந்த அநுசந்தானம் செய்வதன் காரணம் என்ன என்று பல ஜீயர்கள், மடாபதிபதிகள், பண்டி தர்கள் மற்றும் பலரை நான் கேட் டேன். வெள்ளிக்கிழமை ஆனதால் அவ்வாறு செய்யப்படுகிறது என்றும் அது தொன்று தொட்டு வழக்கத்தில் இருக்கிறது என்றும் அவர்கள் கூறி, அதற்கு மேல் அதன் உட்பொருளை அறிய முடியவில்லை என்று சொன் ஞர்கள். அலங்காரம் ஆகும்பொழுது நாச்சியார் திருமொழியை மட்டும் ஸேவிக்கும் காரணத்தை அவர்களால் எனக்கு நிறைவு உண்டாகும்படி விளக்க இயலாது போயிற்று. என் மனம் மட்டும் அதைப்பற்றியே சிந் தித்துக் கொண்டிருந்தது.

1975 ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் வேதாந்த மகாதேசிக ஸ்வாமி அவர்கள் மங் களா சாஸனம் செய்யத் திருமலைக் கோயிலுக்கு எழுந்தருளியிருந்தார் கள். வெள்ளிக்கிழமை அபிஷேகம் ஸேவித்து, திருவேங்கடமுடை யானுக்கு அலங்காரம் ஆகும்போது, ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமிகளும் குல சேகரப்படிக்கு உட்புறம் இருந்து கொண்டு ஏனையோருடன் நாச்சியார் திருமொழிப் பாசுரங்களைக் கண்களில் நீர் சோர, நெக்குருகி, ஆனந்த பர வசத்துடன் ஸேவித்துக் கொண் டிருந்த காட்சி என் உள்ளத்தை நெகிழ்வித்தது. ஆண்டாளே நேரில் வந்து ஸேவிப்பதுபோல் அமைந்திருந் தது அக்காட்சி-ஸ்ரீஜீயர் ஸ்வாமிகள், அத்யாபக ஸ்வாமிகள் ஆகியோர் அதைத் தங்களுக்கு ஏற்பட்ட இனிய தோர் அநுபவமாக நினைத்து வியந்து போற்றினர்.

அப்போது, எனது சந்தேகத்தை ஸ்ரீ ஆண்டவன் ஸ்வாமிகளிடம் மெல்ல எடுத்துக்கூறி, விளக்கம் தரு மாறு பிரார்த்தித்துக் கொண்டேன். அவர் நாத்தழுக்க, "'அகலகில்லேன்' என்று சொல்லியிருந்தும், பிராட்டி யைப் பிரிந்து பிரபு இருக்கிறனே; திருமார்பிலிருக்கும் லக்ஷ்மி தங்கக் குடத்தின் மீதல்லவா இப்போது எழுந்தருளியிருக்கிருள். இப் பிரிவின் வேதனை பிரபுவிற்குத் தெரியாமல் இருக்க அவன் செவிக்கு இன்பமாய், ஆண்டாள் தன் நாயகனைப் பாவித்து பாடிய பாசுரங்களை நாம் அநுசந்தா னம் செய்யும்போது, அப்பிரிவின் வேதனை ஒருவாறு அவருக்குக் குறை யும் என்ற நம்பிக்கையினுல்தான் நாச்சியார் திருமொழி ஸேவிக்கும் வழக்கம் அறிவிற் சிறந்த நமது ஆன் மீகப் பெரியோர்களினல் ஏற்படுத்தப் பட்டுள்ளது. தங்கக் குடத்தின்மீது வீற்றிருக்கும் லக்ஷ்மி மீண்டும் தன் மார்பில் வந்து அமரும் வரை, மதுர பக்தியின் மகிமை தெரிந்த மகான்கள் எம்பெருமானின் துயரைப் போக்கும் வகையில் இதைச் செய்துள்ளனர்" என்று விளக்கியருளினர்.

இறை அநுபவத்திலேயே எப் போதும் திளைத்து மகிழும் ஒரு ஞானி யினுல்தான் இந்த விளக்கம் சாத்திய மாகிறது என்பதை எண்ணி அனை வரும் மகிழ்ந்தனர். திருவேங்கட முடையானைச் சேவிக்க வரும் பக்தர் களுக்கு இந்நிகழ்ச்சியை எடுத்துக் கூறி அவர்களோடு நானும் மகிழ்ச்சி யில் திளைக்கிறேன்.

திரு. எஸ். என். விஜயராகவன்,
திருப்பதி.

# அருணகிரிநாதர் புகழ்ந்த திருவயலூர்

தமிழுக்கு ‘அமுது’ என்னும் பெயர் உண்டு. தமிழ் என்பது இனிமை என்னும் பொருள் குறிப்பது. அதன் உருவாயமைந்த முருகனுக்கும் ‘அமுது’ என்னும் திருப்பெயர் இனிமையாக வழங்கப் பெற்று வருகின்றது.

முருகப் பெருமானுக்குப் ‘பாலன்’ என்னும் பெயரும் உண்டு. பாலன் என்பதைத்தான் ‘பாலமுருகன்’ என்பர். பாலன் என்பது இளமையுடையவன் என்னும் பொருள் குறிப்பது. அருணகிரியார் தான் பாடிய திருப்புகழில்

“என்றும் அழியாத இளமைக்கார”

எனப் பாலமுருகனைப் போற்றுகிறார்.

அருணகிரிநாதர், தமது இளமையில் வறுமை நோய் முதலியவற்றிற்கு இலக்காகி. அதனால் துன்பந்தாளாது, உயிர் வாழ விரும்பாது, திருவண்ணாமலை தலத்தில் வள்ளால மகராசன் கோபுர உச்சியிலிருந்து கீழே விழுந்து உயிர் துறக்கத் துணிந்தார். அப்

டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு,
*திருப்பதி*

பொழுது முருகப் பெருமான் தமது திருக்கரத்தால் அவரைத் தாங்கிக் கீழே விழாது காத்தருளினார். அவரது நோயையும் போக்கி, பிரணவ உபதேசமும் செய்து, உலகம் உய்யும் பொருட்டுத் திருப்புகழ் பாடுமாறு அருள் புரிந்தார்.

திருப்புகழ் என்னும் மந்திரத்தை உலகிற்கு வழங்கிய நம் அருட்கவி அருணகிரிநாதர் விராலிமலைத் தலத்தில் வந்து தங்கியிருந்தார். (விராலிமலைத் தலம் திருச்சியிலிருந்து மதுரைக்குச் செல்லும் சாலையில், சுமார் 18 மைல் தொலைவில் அமைந்து விளங்குகின்றது.) இங்கு முனிவர்கள் முருகப் பெருமானிடம் வழிபட்டு நற்பேறு பெற்றமையை உணர்ந்து, அருணகிரியார் தாமும் வழிபட்டு அருள் வேண்டினர். அவருடைய வேண்டுகோளாவது:

“முருகா! நீ அந்த மாயக் கண்ணனுடைய மருகன். உன் மாமன்செய்த திருவிளையாடல்கள் ஏராளம்! போரில் ஆயுதம் தொட்டுச் செயற்படேன் என்று துரியோதனனிடம் கூறிய கண்ணன், தன் அன்பனாகிய அருச்சுனனைக் காக்க வேண்டி, அம்மொழியையும் தவறவிட்டார். தன் மகனாகிய அபிமன்யுவின் வதத்திற்குக் காரணமாக இருந்த சிந்துபதியாகிய சயத்ரதனை, தான் மறுநாள் சூரியன் மறைவதற்குள் கொன்று பழி தீர்க்காவிட்டால் வெந்தழலில் வீழ்ந்து இறப்பதாக அர்ச்சுனன் கடும் சபதம் செய்தான். சயத்ரதனை நிலவறையில் மறைந்திருக்கச் செய்து கௌரவர்கள் போர் புரிந்தனர். சூரியன் மறைவதற்குச் சிறிது நேரமே இருந்தது. அப்பொழுது கண்ணன் தன் சக்ராயுதத்தை ஏவிக் கதிரவனை மறைக்கவே, அர்ச்சுனன் மதிமயங்கித் தன் சபதத்தை நிறைவேற்றத் தவறியமைக்காக வருந்தித் தீ மூழ்கத் தயாரானான். இந்தக் காட்சியைக் காண மறைந்திருந்த சயத்ரதன் வெளியே வந்து எட்டிப் பார்த்தான். உடனே கண்ணன் சக்ராயுதத்தை விலகுமாறு செய்து, கதிரவன் இன்னும் மறையவில்லை எனக் கூறி, அர்ச்சுனனைத் தூண்டி சயத்ரதனுடைய தலையைக் கொய்யச் செய்தார். அன்பனது அழிவைத் தடுப்பதற்காக மொழி தவறிய பழியையும் தன்மீது ஏற்றுக் கொண்டவனின மருகனே! நீ உன் மைந்தனான என்னை அன்பு செய்யும் தொண்டனாக ஏற்று அருள் புரியவேண்டும்” என்று வேண்டி வழிபட்டார். அருணகிரிநாதருக்கு முருகப்பெருமான் இத்தலத்தில் ஞானோபதேசம் செய்து திருவயலூருக்கு வருமாறு பணித்தார்.

**திருவயலூர் :**

கருணை வள்ளலாகவும், கூர்வேல் தாங்கிய வீரனாகவும் திகழ்கின்ற முருகக் கடவுள், விரும்பி எழுந்தருளிய திருத்தலங்களுள் திருவயலூர் சிறப்பு மிக்கதொரு தலமாகும். இத்திருத்தலம் திருச்சி நகரத்திற்கு மேற்கில் ஏழு மைல் தொலைவில் அமைந்துள்ளது.

வயலூர் என்னும் இத்தலத்தின் பெயர், வயல்+ஊர்—என அமைந்து வயல்களால் சூழப்பெற்ற ஊர் என்று பொருள்படும்.

இப்பொருளுக்கேற்பவே இத்தலம் வயல்களாலும் தென்னஞ் சோலைகளாலும் சூழப்பெற்று, அவற்றின் நடுவே அமைந்து விளங்குகின்றது.

அருணகிரிநாதர் இவ்வயலூர்த் தலம் வந்தடைந்து, முருகப் பெருமானைக் கண்டு வழிபட்டார். முருகப் பெருமான் அவருக்குக் காட்சி கொடுத்தருளினார். முருகப்பிரான் ஒரு திருமுகத்துடனும், நான்கு திருக்கரங்களுடனும் காட்சியளித்து தமது மயில் வாகனத்தையும், வடிவேலையும் பன்னிரு தோள்களையும், வயலூரையும் வைத்துத் தொடர்ந்து பாடுமாறு பணித்தருளினார்.

அருணகிரிநாதரும் அவ்வாறே அவற்றை வைத்துத் திருப்புகழ்ப் பாடல்களைப் பாடினார். அருணகிரிநாதர் இத்தலத்தைச் சிறப்பித்துப் பாடியதோடு நில்லாது, ஏனைய பல தலங்களைப் பாடியவிடத்தும் ‘வய

## சிரிப்பு

ஓயாமல் சிரிப்பவன் பைத்தியக்காரன்;
ஓடவிட்டுச் சிரிப்பவன் வஞ்சகன்;
இருக்குமிடமெல்லாம் சிரிப்பவன் கோமாளி;
கண் பார்த்துச் சிரிப்பவன் கஞ்சன்;
கற்பனையில் சிரிப்பவன் கவிஞன்;
மோஹத்தில் சிரிப்பவன் வெறியன்;
மஹிமையில் சிரிப்பவன் மன்னன்;
தெரியுமென்று சிரிப்பவன் பசப்பாளி;
தெரியாதென்று சிரிப்பவன் நடிகன்;
குழைந்து சிரிப்பவன் சந்தர்ப்பவாதி;
துன்பத்தில் சிரிப்பவன் 'மனிதன்'. —யாரோ.

—கமலா மாரியப்பன்.

லூர்'எனப் பலமுறைக் குறிப்பிட்டு, வயலூரையும் வயலூர் வடிவேலனையும் வியந்து போற்றிச்சென்றுள்ளார்.

இவ்வாறு வயலூர் வடிவேற்பெருமான் அருணகிரிநாதருக்கு அருள் புரிந்த வகையாலும், அருணகிரிநாதர் இத்தலத்தைப் போற்றிப் பாடிய வகையாலும், இத்தலம் அருட்சிறப்பு மிகுந்து விளங்குகின்றது.

இத்திருக்கோயில் ஒரே சுற்றுப் பிரகாரத்தைக் கொண்டுள்ளது. வாயிலைக் கடந்து உள்ளே சென்றால் ஒரு பெரிய முற்றமும், அதன் தென்பாகத்தில் இத்தலத்துப் புனித மரமாகிய வன்னிமரமும் காணப்படுகின்றன.

கோயிலினுள்ளே சென்றவுடன் முதலில் காணப்படுவது, முருகப் பெருமானால் வழிபடப் பெற்ற சிவபெருமான் சந்நிதியாகும் இச்சந்நிதியின் அருகில் அன்னை பராசக்தியின் சந்நிதி அமைந்துள்ளது.

அக்கினீசுவரர் சந்நிதியில் உள்ள நடராஜரின் உற்சவமூர்த்தி, திருவாசிகையற்று, இரண்டு திருவடிகளையும் பீடத்தில் ஊன்றிச் சுந்தரத் தாண்டவக்கோலத்தில் காட்சியளிக்கின்றார்.

பிரகாரத்தின் மேற்குப் பகுதியில் வள்ளி தெய்வயானையோடுள்ள வயலூர் முருகப் பெருமான், மகாஇலட்சுமி, சண்டிகேசுவரர், அருணகிரிநாதர் ஆகியோர் சந்நிதிகள் அமைந்துள்ளன.

பிரகாரத்தின் வடபாகத்திலுள்ள நவக்கிரக சந்நிதியில் சூரிய பகவான் மட்டும் தேவியர் இருவருடன் காட்சியளிக்கின்றார் இஃது இத்தலத்துச் சிறப்புகளில் ஒன்றாகும்.

இக்கோயிற் கருவறையில் எழுந்தருளித் திகழும் முருகப்பிரான் அழகே உருவாக நின்று அருள்பாலிக்கின்றார்.

இவ்வாறு திகழும் திருவயலூர்ப் பெருமானை அக்கினி, சூரியன், சந்திரன் ஆகிய மூவரும் வழிபட்டுள்ளனர்

இத்திருக்கோயிலுக்கு எதிரில் தடாகம் ஒன்று அமைந்துள்ளது. இது குமாரதீர்த்தம், சக்தி தீர்த்தம், அக்கினி தீர்த்தம் என்னும் பெயர்களால் வழங்கப்படுகின்றது.

அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் உருவமற்ற இறைவனை அரூபியாகக் கருதி வழிபாடுசெய்வது உடலுணர்ச்சியுடையவர்கட்கு எளிதில் இயலும் காரியமன்று. ஆதலால் நிர்க்குண பிரம்மத்தைச் சற்குணப் பிரம்மமாக, அடையாளங்களுடன் வழிபடவேண்டும் என்று முருகப்பிரான் இவ்வாறு திருப்புகழ் பாடுமாறு பணித்து, "முத்தைத் தருபத்தித் திருநகை" என்னும் அடியும் எடுத்துக்கொடுத்து அருள் புரிந்தார் அதை முதலடியாகக்கொண்டு அருணகிரியார் ஏராளமான திருப்புகழ் பாடல்களைப் பாடினார்.



போட்டோ: திருமதி. உமா - திருப்பதி.

# கீதை காட்டும் நல்வழி

## மோக்ஷ ஸந்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 26

ச்ரத்தாவானனஸூயஸ்ச
ச்ருணுயாதபி யோ நர: |
ஸோऽபி முக்த: சுபான் லோகான்
ப்ராப்னுயாத் புண்ய கர்மணாம் ||
(18-71)

"ஊக்கம் கொண்டு, அவமதிக்காது இதைக் கேட்கவாவது செய்யும் மனிதனும் விடுதலை அடைந்து, புண்ணிய கர்மம் செய்பவர்கள் அடையும் நல்லுலகங்களை அடைவான்".

வாழ்க்கையில் எந்தத் துறையில் முன்னேற வேண்டுமென்றாலும் நம்பிக்கை இன்றியமையாததாகும். மேற்கொண்டுள்ள காரியத்தில் நாம் பெற்றுள்ள நம்பிக்கையைப் பொறுத்தே அதில் நமது வெற்றி அமைகிறது. செயலில் ஊக்கம் வேண்டும். கேட்பதில் நம்பிக்கை வேண்டும். இரண்டும் இணைந்துவிட்டால் எடுத்த கருமத்தில் வெற்றி நிச்சயம்.

நல்லதைக் கேட்குமளவு நல்லது உண்டாகும். பக்தி மார்க்கத்தின் முதல் படியே 'சிரவணம்' அல்லது கேட்டல் எனப்படுகிறது. ஹரிகதா காலட்சேபம் அதாவது ஹரியின் பெருமையைக் கேட்டல் என்பது தான் நவநா பக்தியின் முதல் நிலை யாகும். அதற்கேற்ப கீதையை ச்ரவணம் பண்ணுமளவு மனம் தூய்மை யடையும் மேலான எண்ணங்கள் அதில் குடி கொள்ளும், வாழ்க்கையின் தரம் உயரும்.

கீதை நமக்கு நல்வழி காட்டத் தயாராயிருக்கிறது. ஆனால் நமக்கு கீதையினிடத்தில் சிரத்தை வேண்டுமே! 'வெள்ளத்தனையது மலர் நீட்டம் மாந்தர்தம் உள்ளத்தனையது உயர்வு' என்பதற்கேற்ப கீதையிடம் நாம் கொண்டு விளங்கும் சிரத்தை அல்லது நம்பிக்கைக்கேற்ப அதனிடமிருந்து நாம் பெறும் நலனும் அதிகரிக்கிறது. கையிலே வைரம் இருந்தாலும், அது வைரம் என்று தெரிந்தால்தான் அதனால் நாம் பெறும் பயனும் அதிகரிக்கும். பெறற்கரிய பொக்கிஷத்தைப் பெற்று விளங்கினாலும் அதனது பெருமையை நாம் உணராவிட்டால், அதனால் நமக்கு யாதொரு பயனும் உண்டாகாது.

இன்று நம்மிடத்தில் இருக்கும் மறை நூல்களுக்குப் பஞ்சமில்லை; அள்ள அள்ளக் குறையாத ஆன்மீகக் கருத்துக்களுக்கு எந்தவிதக் குறைவுமில்லை. ஆனால் நம்மில் எத்தனை பேருக்கு அவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் இருக்கிறது. மற்ற எந்த சமயத்தில் உள்ளதையும் விட நமது ஹிந்து சமயத்தில் உள்ள மறை நூல்கள் மற்றும் உயர்ந்த தத்துவங்கள் மிக அதிகம். ஹிந்து சமயம் ஒரு ஞானக் கடல். அந்தக் கடலில் ஆழ்ந்து செல்லச் செல்ல விலை மதிப்பற்ற வைரம், வைடூரியம், பவளம், முத்து இன்னும் பல அரிய பொருள்கள் அகப்படும். தேவைப்படுவது சிரத்தையும் பக்தியும்தான்.

'கீதை என் வாழ்வின் வழி காட்டி' என்ற நம்பிக்கை நம்மிடம் இருத்தல் அவசியம். அப்பொழுது அதைக் கேட்பதற்கான ஊக்கம் நம்மிடம் ஓங்கும். கீதையை அவமதிக்காது ஊக்கத்துடன் கேட்பவர்கள் புண்ணிய உலகங்களை அடைகிறார்கள் என்று பகவான் கூறுகிறார்.

கீதையைக் கேட்ட அர்ஜுனனிடம் எத்தகைய மாற்றம் ஏற்பட்டது என்பது பற்றி அடுத்த சுலோகத்தில் பகவான் கேட்கிறார்.

கச்சிதேதச்ருதம் பார்த்த
த்வயகாக்ரேண சேதஸா |
கச்சிதக்ஞான ஸம்மோஹ:
ப்ரநஷ்டஸ்தே தனஞ்ஜய || (18-72)

'பார்த்தா! ஒரு மனதுடன் உன்னால் இது கேட்கப்பட்டதா? தனஞ்ஜயா! உனது அறியாமையாகிய மயக்கம் அழிந்ததா?'

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.Sc., M.Phil.
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

ஒரு வகுப்பில் நாற்பது மாணவர்கள் கல்வி கற்கின்றனர். அத்தனை பேருக்கும் ஒரே ஆசிரியர் பாடம் சொல்லித் தந்தாலும் சில மாணவர்கள் சொல்லித் தருவதை உடனேயே கிரகித்துக்கொள்கின்றனர். அவர்கள் தேர்வில் மிக அதிக மதிப்பெண்களைப் பெறுகின்றனர். வேறு சிலர் தேர்வில் மிகக் குறைந்த மதிப்பெண்களைப் பெறுகின்றனர். என்ன காரணம்? முன்னவன் ஆசிரியர் சொன்னதை ஒரு மனதுடன் அதாவது ஏகாக்ர சித்தத்துடன் கேட்டான். கேட்டது உடனே அவனுக்குப்புரிந்தது. பின்னவன் சிதறடைந்த மனத்துடன் கேட்டான் கேட்டது புரியவில்லை. இது தான் காரணம்.

தேர்வில் தோல்வியுறும் மாணவர்கள் பலர் தங்கள் தோல்விக்கு ஆசிரியர் காரணம், கேள்வித்தாள் காரணம், விடைத்தாள் திருத்தியவர் காரணம் எனப் பலர்மீது பழி சுமத்துவர். ஆனால் அடிப்படைக் காரணம் அவர்களிடம் மன ஒருமைப்பாட்டுடன் கூடிய முயற்சி இல்லை என்பதாகும். நாம் எதைக் கேட்டாலும், எதைக் கற்றாலும் ஒருமை மனதுடன் கேட்டால், கற்றால் அது பசுமரத்தாணி போல மனதில் பதியும்.

ஆசிரியர் எவ்வளவுதான் திறமைசாலியாகவும் பேரறிஞராகவும் திகழ்ந்தாலும், கேட்கும் மாணவனிடம் மன ஒருமைப்பாடு இல்லையெனில் செவிடன் காதில் ஊதிய சங்கைப் போலத்தான் முடியும். குவிந்த மனம் மேலான ஞானத்தைப் பெறத் தகுதியுடையதாகிறது. உதாரணமாக சூரிய கிரணங்கள் ஒரு புள்ளியில் குவிகின்ற அளவு அவற்றின் ஆற்றல் பன்மடங்காக அதிகரிக்கின்றது. சிதறிப் போனால் அவற்றின் ஆற்றல் குறைகிறது. இந்தத் தத்துவம் நம் மனத்திற்கும் பொருந்தும். தியானம் செய்வதன் நோக்கமும் இதுதான். சிதறடைந்த மனம் குவிகின்ற பொழுது மேலாம் ஞானத்தைப் பெறும் ஆற்றல் அதனிடம் தோன்றுகிறது. ஞான சூரியன் தோன்றுகையில் அக்ஞான இருள் தானே அகன்றுவிடும்.

'அர்ஜுனா! நான் இதுகாறும் கூறியவற்றை நீ மன ஒருமைப்பாட்டுடன் கேட்டாயா? அதனால் உனது அறியாமையாகிய மயக்கம் ஒழிந்ததா?' என்று அன்புடன் பகவான் தம் சீடனாகிய அர்ஜுனனைக் கேட்கிறார்.

இதுதான் நல்லாசிரியனின் உத்தமமான குணமாகும். தாம் சொன்னது அனைத்தையும் மாணவர்கள் ஒருமை மனதுடன் கேட்டார்களா, அதைப் புரிந்து கொண்டார்களா, அதன் விளைவாக அவர்களது அறியாமையாகிய மயக்கம் அகன்றதா என்ற ஆர்வம் உள்ளவர்களே உத்தமமான குருமார் ஆவார். பகவான் ஸ்ரீகிருஷ்ணர் அத்தகைய உத்தம குருவிற்கு இலக்கணமாகத் திகழ்கிறார்.

நல்லாசிரியரை அண்டிப் பாடம் கேட்கும் தலைமாணாக்கனிடம் எத்தகைய மாற்றம் நிகழ்கிறது என்பது அடுத்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது.

பகவான் கேட்ட கேள்விக்கு அர்ஜுனன் பதில் சொல்லுகிறார்.

அர்ஜுன உவாச:

நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர்லப்தா
த்வத்ப்ரஸாதான் மயா Sச்யுத |
ஸ்திதோ Sஸ்மி கதஸந்தேஹ:
கரிஷ்யே வசனம் தவ || (18-73)

'அச்யுதா! மயக்கம் ஒழிந்தது. உமது அருளால் எனக்கு நினைவு வந்துள்ளது, எனது சந்தேகங்கள் அகன்று விட்டன. நான் இப்பொழுது என் நிலையில் உறுதியாயிருக்கிறேன். உமது சொற்படியே செய்வேன்'

போர்க்களத்தில் உற்றார் உறவினரைப் பார்த்து பாசத்தின் வயப்பட்ட அர்ஜுனன் தன் நிலையை மறந்து கடமையை மறந்து கோழையாகிப் 'போர்புரிய மாட்டேன்' என்று தேர்த்தட்டில் அமர்ந்துவிட்டான். அந்த நிலையில் அவன் பகவான் ஸ்ரீகிருஷ்ணரிடம் தன்னையே ஒப்படைத்தான். 'கண்ணா! எனக்கு எது நலம் பயக்குமோ அதை நீ எனக்குக் கொடு. நீ குரு. நான் உமது சீடன்'! என்று சரணாகதி அடைந்தான். அவனிடம் இருந்த அகங்காரம் முழுதும் அற்றுப் போனது. தாயையே அடைக்கலம் புகும் குழந்தை போல, பகவானையே முழுவதும் தஞ்சம் புகுந்த பக்தனாக அர்ஜுனன் மாறினான். 'நன்றே செய்வாய் பிழை செய்வாய், நானோ இதற்கு நாயகமே என்ற உயரிய பக்தி நிலையில் அவன் இருந்தான். அத்தகைய நிலையில் இருந்த அர்ஜுனனுக்குப் பகவான் கீதையை உபதேசம் செய்தார். அவர் செய்த அந்த உபதேசம் எல்லாக் காலத்திற்கும் எல்லா நாட்டவர்க்கும் அர்ஜுனனின் நிலையில் உள்ள அனைவருக்கும் பொருந்துவதாகும். பிறவிப் பிணியை நீக்க வல்ல அரிய மருந்து அது. அதனால் தான் கீதை புகட்டப்பட்டு எத்தனையோ ஆயிரம் ஆண்டுகள் கழிந்த பின்னரும் இன்றும் மனித சமுதாயத்திற்கும் அது மகத்தான வழியைக் காட்டிக் கொண்டிருக்கிறது, என்றும் அது காட்டும் என்பதிலும் ஐயமில்லை.

இந்த சுலோகத்தில் பகவான் திருவாய் மலர்ந்தருளிய அமுத வாக்கினால் தன்னிடம் என்னென்ன மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன என்பதை அர்ஜுனன் தெரிவிக்கிறான். அவன் பயன்படுத்தும் ஒவ்வொரு வார்த்தையும் பொருள் பொதிந்து விளங்குகிறது.

பகவானை 'அச்யுதா' என்று அர்ஜுனன் அழைக்கிறான். 'அச்யுதன்' என்றால் மேல் நிலையினின்று கீழே விழாதவன் என்பது பொருள். 'இறைவா! நீ என்றும் மேலானவன். நான் கீழானவன். இப்பொழுது உனதருளால் என் நிலை உணர்ந்து பிறவிப் பெருங்கடலில் வீழாத பெருநிலையை அடைவேன்', என்று அர்ஜுனன் பெருமிதம் கொள்கிறான்.

(தொடரும்)

ஸ்ரீய: பதியான ஸர்வேஸ்வரன் ஸ்ரீமந்நாராயணன் உலக தர்ம சம் ரக்ஷணார்த்தமாய்

''பரித்ராணாய சாதூநாம் விநாசாய ச
துஷ்க்ருதாம் |
தர்ம சம்ஸ்தாபநார்த்தாய சம்பவாமி
யுகே யுகே''

என்று தாமே திருவாய்மலர்ந்தருளின படி ஸ்ரீ ராமக்ருஷ்ணாத்யவதாரங்களை எடுத்து அருளினன். அதிலும் போதிய த்ருப்தியேற்படாமையாலே ம்ருகத்தைக் கொண்டு அதே சாதியைச் சார்ந்த பிற ம்ருகத்தை பிடிப்பாரைப் போலே, மானிடர்களான ஜீவாத்மாக்களை பாப திசையிலிருந்து திருத்திப் பணிகொள்ள திருவுள்ளம் பற்றினன். இவ்விதம் எம்பெருமானுடைய திருவுள்ளப்படிக்கு அவனுடைய அங்கத்திலும், அருகிலும் இருந்து அநவரதம் கைங்கர்யம் வுடன் பரவிடச் செய்து உலகோர் உய்யும் வகையை அருளினார். ஸ்வாமி எம்பெருமானாருக்கு ஆளவந்தாரின் திவ்யாக்ஞைப்படி திருமந்திர ரஹஸ்யார்த்தங்களை அருளிட பதினெட்டு முறை அவரை நடக்கச் செய்து, அவருடைய பெருமைகளை யாவரும் அறியச் செய்தார் திருக்கோட்டியூர் நம்பிகள்.

ஸ்வாமி இராமாநுஜரும் ''தாம் ஒருவர் மட்டும் அன்றோ நரகம் புகுவது, ஆனல் எம்பெருமானுடைய பேரருளைப் பெறும் வண்ணம் திருமந்திர ரஹஸ்யங்களை விரும்பி உரைக்கின்ற பலரும் பயன் பெறுவார்கள் அன்றோ'' என்ற பரந்த சிந்தையுடன் ஆசையுடைய நல்லோர்க்கு ரஹஸ்யார்த்தங்களை உபதேசித்து ''எம்பெருமானார்'' என்ற சிறப்புத் திருநாமம் வழங்கப்பெற்றார்.

கொண்டு செய்த காரியங்களைவிட எம்பெருமானார் தம் நிர்ஹேதுக க்ருபையால் அதிகரித்து செய்ததாலே எம்பெருமானே வியப்புற்றதாயும் பெரியோர் பணித்துள்ளனர்.

''ஸ்வாமி எம்பெருமானார் இக் கலியுகத்தில் அவதரித்து தரிசனத்தை நிர்வகித்து அருளுவார்'' என்பதை சில ஆயிரம் வருஷங்கட்கு முன்பாகவே நம்மாழ்வாரும் தம் திருவாய்மொழி ப்ரபந்தத்தில் ''பொலிக! பொலிக!'' பாசுரத்தாலே ''கலியும் கெடும் கண்டு கொண்மின்!'' என்று அருளியுள்ளதன் மூலம் குறிப்பால் உணர்த்தியுள்ள பேருண்மைகளை பூர்வர்கள் தெளிவாக விளக்கியுள்ளனர்.

''பொலிக! பொலிக! பொலிக!
போயிற்று வல்லுயிர்ச் சாபம்
நலியும் நரகமும் நைந்த
நமனுக்கு இங்கு யாதொன்று
மில்லை

# அவதார ரஹஸ்யம்

திரு. ஏ. டி. ஆர். மாதவன்,
திருக்கோஷ்டியூர்.

செய்து வருகிற சங்கு, சக்ரம் முதலான ஆழ்வார்களையும், அநந்த கருட விஷ்வக்ஸேனாதிகளையும் ஆழ்வார்களாய், ஆசார்யர்களாய் அவதரிக்கச் செய்தான்.

ஆழ்வார்கள் வேத சூக்திகளையும், பக்தி நெறிகளையும் நான்கு ப்ரபந்தங்களாய் சதுர்வேத சாரமாய், திராவிட பாஷையான செந்தமிழில் அருளிச் செய்தார்கள்.

ஆழ்வார்கள் அருளிய பாசுரங்கள் நம்மாழ்வார் பேரருளாலே நாதமுனிகள், உய்யக் கொண்டார், மணக்கால் நம்பி முதலானோர் மூலமாக வழி வழியாக ஸ்வாமி எம்பெருமானாரையும், மற்றை ஆச்சார்யர்களையும் வந்தடைந்தன.

ஸ்வாமி எம்பெருமானாரும் தம்முடைய பரமக்ருபையாலே ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தை உலகில் பொலி

ஸ்வாமி எம்பெருமானாரின் திருநாமத்தாலே, ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த தரிசனமும் ''ஸ்ரீ எம்பெருமானார் தரிசனம்'' என்ற திருநாமத்தோடு விளங்கிப் பொலிவுற ஸ்ரீ நம்பெருமாளும் திருவுள்ளம்பற்றி அத்திருநாமத்தை அங்கீகரித்தருளினார்.

இச் செய்தியை,

''எம்பெருமானார் தரிசனமென்றே
யிதற்கு
நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்
தார்—அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை எம்பெருமா
னார் வளர்த்த
அந்தச் செயலறிகைக்கா.''

என்று ஸ்வாமி மணவாளமாமுனிகள் உபதேச ரத்தினமாலையில் பகர்கிறார்.

எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணன் மானிடர்களைத் திருத்திப் பணி

கலியும் கெடும் கண்டு கொண்மின்
கடல் வண்ணன் பூதங்கள் மண்
மேல்
மலியப் புகுந்து இசைபாடி
ஆடியுழிதரக்கண்டோம்.''

(திருவாய்மொழி 5-ம் பத்து-2-திருவாய்மொழி-1ம் பாசுரம்)

''பொலிக! பொலிக! பொலிக!'' என்ற பாசுரத்தாலே சடகோபன் ஸ்ரீ இராமானுஜர் அவதரிக்கப்போவதை முன்னதாகவே குறிப்பால் உணர்த்தியதைப்போலவே ஸ்ரீ பெரியாழ்வாரும் தம் திருமொழிப் பாசுரத்தாலே

''வண்ணமாடங்கள் சூழ் திருக்
கோட்டியூர்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்த
னில்
எண்ணெய் சுண்ணம் எதிர் எதிர்
தூவிட
கண்ணன் முற்றம் கலந்தளறு
யிற்றே''

என்று திருக்கோஷ்டியூரில், எம்பெருமானே ஸ்ரீ நம்பியாக அவதரிக்கப் போகின்றான் என்பதை முன்னதாகவே குறிப்பால் உணர்த்தியுள்ளார்.

ஸ்ரீ ராமாவதார காலத்திலே எம்பெருமான் ஸ்ரீ ராமனாக அவதரித்தான்; அவனுடைய தம்பியாக லக்ஷ்மணனாக ஆதிசேஷன் தானே அவதரித்தான்.

"சென்றால் குடையாம் இருந்தால்
சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள் கடலுள்
—என்றும்
புணையாம் மணி விளக்காம் பூம்
பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு"

என்கிறபடி ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்து வருகிற ஆதிசேஷனே இளையாழ்வாராக அவதரித்த பேருண்மைகளை ஸ்ரீமத் ராமாயண காவியத்தில் பல இடங்களில் காண்கிறோம்.

ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில் எம்பெருமான் ஸ்ரீ கிருஷ்ணனும் ஆதிசேஷன் பலராமனாகவும் அவதரித்தனர்.

இவ்விதமாய் எம்பெருமான் எப்போதெல்லாம் எங்கெங்கு அவதரிக்கிறானோ அங்கெல்லாம் ஆதிசேஷன் அந்தரங்க கைங்கர்யபரனாக உடனாகவே இருந்து வருகிறான்.

இதே உண்மை நிலைப்படியாக ஆதிசேஷனுடைய அவதாரமாக (இளையாழ்வார்) ஸ்வாமி எம்பெருமானார் அவதரித்தார். ஸ்வாமி எம்பெருமானாருக்கு மந்த்ர ரஹஸ்யார்த்த விசேஷங்களை யெல்லாம் உபதேசித்தும், அவர் சிறப்புக்களை உலகிற்கு வெளிப்படுத்திய பெருமைகளையுடைய நம்பிகள் ஸ்ரீமந்நாராயணனின் அவதாரமே என்பர் பெரியோர். எம்பெருமான் தானே ஸ்ரீ கிருஷ்ணனாக ஆவணி ரோகிணி நன்னாளில் அவதரித்தான். அவனே ஸ்ரீ கோஷ்டிபூர்ணராக நம்பிகளாக வைகாசி ரோகிணியில் அவதரித்தான்.

எம்பெருமான் பாரதப் போரில் சேனை நடுவில் பார்த்தனின் செல்வத் தேர் தட்டில் சாரதியாய் நின்று 18 அத்யாயங்களுடைய கீதையை அருளினான். அவனே ஸ்ரீ நம்பியாக நைமிசாரண்யம், குருக்ஷேத்ரம், த்வாரகை, கோகுலம் முதலான புண்ய க்ஷேத்திரங்களுக்கு ஒப்பான திருக்கோஷ்டியூர் திவ்ய தேசத்தில் 18 முறை ஸ்வாமி இராமானுஜரை அழைத்து 18 மெய்மைப் பெருவார்த்தைகளை அருளி அதன் பூர்த்தியாக திருமந்த்ரார்த்த, சரம ஸ்லோகப் பொருளை மிக்க பெருமையுடன் உபதேசித்தருளினான்.

எம்பெருமான் நம்பெருமாளாய் திருவரங்கத் திருப்பதியில் ஸ்ரீ மணவாள மாமுனிகளிடத்தில் காலக்ஷேபம் கேட்டு, பெருமையுற்று, ஸ்ரீ மணவாளமாமுனிகளைத் தம் ஆசார்யராக ஏற்றும் ஸ்ரீ மணவாள மாமுனிகட்கு,

"ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி
குணார்ணவம் |
யதீந்த்ர ப்ரணவம் வந்தே ரம்யஜா
மாதரம் முநிம் ||"

என்று தனியன் அருளினான்.

அதுபோல அதற்கு முன்னதாக ஸ்ரீ நம்பியும் மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கம் அருளியும், அர்ச்சாமூர்த்தியை மிக்கச் சிறப்புடன் மங்களாசாஸனம் செய்தும், திருக்கோஷ்டியூர் எம்பெருமானிடத்தில் அதிக ஈடுபாடும் உடைய ஸ்ரீ பரகாலன் திருமங்கை மன்னனுக்கும் தம் நன்றிகடப்பாடு தோன்றுமளவில்,

"கலயாமி கலித்வம்சம் கவிம் லோக
திவாகரம் |
யஸ்யகோபி: ப்ரகாஸாபி: ஆவித்யம்
நிகதம் தம: ||"

என்று தனியன் அருளி கௌரவித்துள்ளார்.

இவ்விதமாய் பல படிகளாலே தானே ஆசார்யனும் தானே சிஷ்யனுமாயிருந்து முன்பு பதரிகாஸ்ரம க்ஷேத்ரத்தில் திருமந்திரம் வெளியிட்டருளினாற்போலே எம்பெருமான் தானே நம்பியாகவும், ஆதிசேஷனே நம் இராமானுஜனாகவும் அவதரித்து மீண்டும் சரமஸ்லோக ரஹஸ்யார்த்தங்களையும், அவற்றின் விசேஷங்களையும் நமக்காகவே வெளியிட்டு அருளினன். இதன் மூலம் ஸ்ரீ எம்பெருமானே நம்பியாக அவதரித்த பேருண்மைகளை பெரியோர் பணித்தபடி அறிய முடிகிறது.

"ஸ்ரீ எம்பெருமானார் திருவடிகளே
சரணம்"

*

# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில் எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறாதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க்கடிதத்தில் மணியார்டர் எண், செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியர்.

# ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி

अम्लानहृष्यदवनीतलकीर्णपुष्पौ
श्रीवेङ्कटाद्रिशिखराभरणायमानौ ।
आनन्दिताखिलमनोनयनौ तवैतौ
श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ।। १३ ।।

அம்லாந ஹ்ருஷ்யதவநீதல கீர்ண புஷ்பௌ
ஸ்ரீ வேங்கடாத்ரி சிகராபர ணயமாநௌ |
ஆநந்திதாகில மநோ நயநௌ தவைதௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

பதவுரை :—ஸ்ரீவேங்கடேச=திருவேங்கட முடையானே; அம்லாந ஹ்ருஷ்யத்=வாடாமல் மலருகின்ற; அவநீ தல கீர்ண புஷ்பௌ=மண் மேல் (தரையில்) இறைந்து கிடக்கின்ற பூக்களை உடையவைகளும்; ஸ்ரீ வேங்கட அத்ரி சிகர ஆபரணயமாநௌ=திருவேங்கடமலை உச்சியில் அணியப் பெற்ற அணிகளாயிருப்பவைகளும்; ஆநந்தித அகில மநோ நயநௌ=எல்லோருடைய உள்ளங்களையும் கண்களையும் களிக்கச் செய்கின்றவைகளுமான; ஏதௌ=இந்த; தவ=உன்னுடைய; சரணௌ=திருவடிகளை; சரணம்=சரணமாக; ப்ரபத்யே=அடைகிறேன்.

கருத்துரை :—தேவர்களும் பிறரும் எண்ணிறந்த மலர்களை இறைவன் திருவடிகளில் சேர்க்கின்றனர். அங்கு இடம் பெறாது அம்மலர்கள் தரையில் இறைகின்றன. இறைவன் இணையடி ஸம்பந்தம் பெற்றமையால் அம்மலர்கள் வாடுவதில்லை. மலர்ந்து விளங்குகின்றன. இறைவன் திருவடிகள் மலைக்கு ஒப்பற்ற அணிகளாய் விளங்குகின்றன. பக்தர்கள் அனைவரும் கண்களாரக் கண்டு மனமாரக் களிக்கின்றனர்.

प्राय: प्रपन्नजनताप्रथमावगाह्यौ
मातु: स्तनाविव शिशोरमृतायमानौ ।
प्राप्तौ परस्परतुलामतुलान्तरौ ते
श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ।। १४ ।।

ப்ராய: ப்ரபந்ந ஜநதா ப்ரதமாவகாஹ்யௌ
மாது: ஸ்தநாவிவ சிசோ ரம்ருதாயமாநௌ |
ப்ராப்தௌ பரஸ்பர துலா மதுலாந்தரௌ தே
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

பதவுரை :—ஸ்ரீவேங்கடேச=திருவேங்கடமுடையானே! ப்ராய:=வெகுவாக; ப்ரபந்ந ஜநதா=அடைக்கலம் புகுந்த ஜனத்திரள்களுக்கு; ப்ரதம அவகாஹ்யௌ=முதலில் முழுகி (உட்புகுந்து) அனுபவிக்கத் தக்கவைகளும்; சிசோ: மாது: ஸ்தநௌ இவ=குழந்தைகளுக்குத் தாயின் மார்பகம் போல்; அம்ருதாய மாநௌ=அமுதாகின்றவைகளும்; பரஸ்பர துலாம்=ஒன்றுக்கொன்று ஒப்புமையை; ப்ராப்தௌ=பெற்றவைகளும்; அதுலாந்தரௌ=வேறு ஒப்பிலாதவைகளுமான; தே=உன்னுடைய; சரணௌ=திருவடிகளை; சரணம்=அடைக்கலமாய்; ப்ரபத்யே=அடைகிறேன்.

கருத்துரை :—இறைவன் திருவடிகள் தங்களுக்குள் தாம் இணையாகுமேயன்றி வேறு இணையில்லாதவை. தாய் முலைப்பாலைப் பெற்ற குழந்தை போல் பக்தர்கள் இவ்விணையடிகளைப் பெற்று மகிழ்கின்றனர். ஆதலின் எவரும் திருவடிகளுக்குத் தொண்டு புரிவதையே முதலில் விரும்புகின்றனர்.

सत्त्वोत्तरैस्सततसेव्यपदाम्बुजेन संसारतारकदयार्द्रदृगञ्चलेन ।
सौम्योपयन्तृमुनिना मम दर्शितौ ते श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ।। १५ ।

ஸத்வோத்தரைஸ் ஸதது ஸேவ்ய பதாம்புஜேந
ஸம்ஸார தாரக தயார்த்ர த்ருகஞ்சலேந |
ஸௌம்யோபயந்த்ருமுநிநா மம தர்சிதௌ தே
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

பதவுரை :—ஸ்ரீவேங்கடேச=திருவேங்கடமுடையானே! ஸத்த்வ உத்தரை:=நற்குணம் நிறைந்தவர்களால்; ஸதத ஸேவ்யபத அம்புஜேந=எப்பொழுதும் வணங்கத்தகும் மலரடிகளை உடையவரும்; ஸம்ஸார தாரக=பிறவியை(க்கடலை)த் தாண்டச் செய்யும்; தயா ஆர்த்ர=கருணையால் குளிர்ந்த; த்ருக் அஞ்சலேந=கடைக் கண்களை உடையவருமான, ஸௌம்யோபயந்த்ரு முநிநா=மணவாள மாமுனிகளால்; மம=எனக்கு; தர்சிதௌ=காண்பிக்கப் பெற்றவைகளான; தே சரணௌ=உன் திருவடிகளை; சரணம்=அடைக்கலமாய்; ப்ரபத்யே=அடைகிறேன்.

கருத்துரை :—பெரியவர்களால் வணங்கத் தக்கவரும் கருணைக்கடலுமாகிய ஸ்ரீ மணவாள மாமுனிகளால் உன் 'திருவடிகளே; உலகோர்க்குற்ற ...' என்று எனக்கு (இக்கவிக்கு)க் காண்பிக்கப் பெ,

श्रीश श्रिया घटिकया त्वदुपायभावे
प्राप्ये त्वयि स्वयमुपेयतया स्फुरन्त्या।
नित्याश्रिताय निरवद्यगुणाय तुभ्यं
स्यां किङ्करो वृषगिरीश न जातु मह्यम्॥ १६॥

ஸ்ரீச ச்ரியா கடிகயா த்வதுபாயபாவே
ப்ராப்யே த்வயி ஸ்வயமுபேயதயா ஸ்புரந்த்யா |
நித்யாச்ரிதாய நிரவத்யகுணய துப்யம்
ஸ்யாம் கிங்கரோ வ்ருஷகிரீச நஜாதுமஹ்யம் ||

பதவுரை:—வ்ருஷகிரி ஈச=திருவேங்கட முடையானே! ஸ்ரீ ஈச=திருமகள் நாதனே! த்வத் உபாய பாவே=நீ உபாயமாகும் பொழுது; ஸ்வயம் கடிகயா=தான் சேர்த்து வைப்பவளாக இருக்கின்றவளும்; த்வயி ப்ராப்யே=நீ அடையப்பெறும் பயனுகும் பொழுது! ஸ்வயம்=தான்; உபேயதயா ஸ்புரந்த்யா=அடையத்தகும் பயனுக இருக்கின்றவளுமான; ச்ரியா=திருமகளால்; நித்ய ஆச்ரிதாய=எப்பொழுதும் அடையப் பெற்றவனும்; நிரவத்யகுணய=குற்றமற்ற குணங்களை உடையவனுமான; துப்யம்=உனக்கு; கிங்கர:=தொண்டனுக; ஸ்யாம்=இருப்பேன்; ஜாது=ஒருக்காலும்; மஹ்யம்=எனக்கு; கிங்கர:=தொண்டனுக; ந ஸ்யாம்=இருக்கமாட்டேன்.

கருத்துரை:—நாம் இறைவன் திருவருளுக்குப் பாத்திரம் ஆகும்படி செய்பவள் திருமகள். பிறவிக் கடலைக் கடப்பதற்குக் காரணமாயிருப்பவன் திருமால். பரமபதமடைந்த பிறகு நாம் அத்திவ்ய தம்பதிகளுக்குத் தொண்டு செய்து மகிழ்கிறோம். நாம் எப்பொழுதும் பரம புருஷனுக்கடிமை. சுதந்திரர்களல்லோம்.

ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி முற்றிற்று.

---

16-ம் பக்கத் தொடர்ச்சி)

நாயகி பாவத்தில் பாடிய பாசுரங்களை ஆழ்வார் கூற்றுகக் கொள்ளாமல் 'பரகால நாயகி' பேச்சாகவே கொள்ளும் மரபு வைணவரிடையே ஏற்பட்டிருக்கிறது.

திவ்யப்பிரபந்த பாசுரங்களுக்கு ஸ்வாபதேசப் பொருள் கூறும் முறை வைணவர்களால் போற்றப்பட்டு வருகிற சம்பிரதாயமாகும். அவற்றின் இலக்கியப் பெருமைகளைப் பெரும்பாலான இளைய தலைமுறையினர்களால் உணர்ந்து கொள்ள முடியாமல் போய்விட்டதற்கு, இந்த ஸ்வாபதேசத் திரையே காரணமாகுமெனக் கருதுவோருண்டு. இக்கூற்று ஏற்புடையதன்று. உரையாசிரியர்கள் பலரும், அவைகளின் தத்துவார்த்தங்களைத் தெளிவாக எடுத்து ஓதிவருவதும், உள் பொருளை தெள்ளிதின் விளக்கி உரைப்பதும், திவ்யப் பிரபந்தத்தில் ஈடுபாடு உள்ளவர்களுக்குப் புரியும்படியாக உள்ளதெனலாம்; பக்தி மார்க்கத்தில் தங்களை ஈடுபடுத்தித் திருமாலின் திருவடிப்பேறு சித்திக்க அந்தப் பாசுரங்கள் துணை புரியும் எனலாம்.

பெண்கள் மடலூர்தல் தமிழ் மரபுக்கு மாறுக உள்ளது என்பதனை நியாயப்படுத்துகிறது.

"அலரேச ஆடவர் மேல்
மன்னு மடலூ ரார் என்பதோர் வாசகமும்
தென்னுரையில் கேட்டறிவதுண்டு—அதனையாம் தெளியோம்
மன்னும் வடநெறியே வேண்டினோம்......"

பெரிய திருமடல்—(38–39)

என்று திருமங்கையாழ்வார், தமிழ் மரபுக்கு மீறியதை அறிந்தும், திருமடல்களைப் பாடியிருப்பதுபற்றி விளக்கங்கள் பலவாகக் கூறப்படுவதுண்டு. எனினும், ஆழ்வாருடைய திருமடல்களில் தமிழ் நெறிச் சாயல்களே மிக்குக் காணப்படுகின்றதெனலாம்; குறவஞ்சி பிரபந்த வகையின் சில அங்கங்களை இந்த திருமடல்கள் உள்ளடக்கமாக கொண்டுள்ளதைக் காணலாம்.

ஆசையின் மிகுதியாகலே பெண்மைக்குரிய நாணம் தவிர்த்து, நாயகன் பின்னே போவதும், நாயகனை வலிதில் தனதாக்கிக் கொள்வதும், நாயகனைப் பெறதற் பொருட்டு தவத்தினை மேற்கொள்வதும் ஆகியவை பெண்கள் மாட்டு வெளிப்படுத்தப்படும் செயல்பாடுகள் மடலூர்தலுக்கு ஒப்பானதாகவே ஆழ்வார் கருதியிருக்கிறுர் என்பது திருமடல்களில் நாம் காணும் செய்தியாகும்.

தன் உள்ளம் கவர்ந்த திருமாலைக் கண்டு,

"என்னிலைமை எல்லாம் அறிவித்தால் எம்பெருமான்
தன்னருளும் ஆகமும் தாரானேல்"

என்று பரகால நாயகியாகிய பாவத்தினல், சற்றே நிதானித்து அவன் கோவில் கொண்டுள்ள தலம்தோறும் சென்று அவனைத் தூற்றுவேன் என்கிறுள் பெரிய திருமடலில்.

"பேராயிரமும் பிதற்றி—பெருந் தெருவே
ஊரார் இகழினும் ஊரா தொழியேன் நான்
வாரார் பூம் பெண்ணை மடல்"

என்கிறுள் சிறிய திருமடலில்.

திருமங்கையாழ்வார் பாடிய 'சிறிய திருமடல்', 'பெரிய திருமடல்' ஆகிய இரண்டிலும், ஆடவன் மடல் ஏறியதாகக் கூறுதலற்குமாறுக, திருமாலிடத்துக் காதல் கொண்ட பெண்ணெருத்தி 'மடல் ஏறுவேன்' என்று கூறுவதாகப் பாடப்பட்டிருப்பது, இலக்கியம் பெற்ற வளர்ச்சியாகவே கருதலாம்.

# கங்கா ஸ்நானமும் கங்கையின் பெருமையும்

நாட்டையும், நதியையும் தாயாகக் கொண்டாடுவது இந்தியர்களாகிய நமது மரபு. நாடு உடலை வளர்க்கும்; நதி நீர் உடலையும், உண்மை அறிவையும் வளர்க்கும். நீருக்குத் திருவள்ளுவர் 'அமிர்தம்' என்று பெயரிட்டார். வேதமும் நீரை 'அமிர்தம்' என்கிறது. அத்தகைய உயிர்களின் ஜீவாதாரமான நீரின் பெருக்கையே ஆறு என்கிறோம். அந்த ஆறுகளிலும் மலைகளிலும் தோன்றி மாநிலத்தில் தவழ்ந்து செழிப்பைத் தந்து கடலில் கலந்து, என்றும் வற்றாத நீர் பெருக்குடைய ஆறுகளை "ஜீவநதி" என்கிறோம். மேற்கே இருந்து கிழக்கே ஓடுவதை பெண் நதி என்றும், கிழக்கே தோன்றி


திரு. என். சுப்பிரமணியன்

தஞ்சாவூர்.


மேற்கே ஓடுவதை ஆண் நதி என்றும் சில நூல்கள் கூறுகின்றன. ஓடும் நீரில் மின்சார சக்தி பரவி இருக்கும் என்றும், இரத்தத்தை சுத்திப்படுத்தும் ரசாயன சத்தி இருக்கிறது என்றும் கூறுகிறார்கள். அதனால்தான் காலையில் நாள்தோறும் குடைந்து நீராடுவது எல்லாவற்றிற்கும் நலம்.

இத்தகைய ஜீவ நதிகளில் கங்கை, யமுனை, கோதாவரி, சரஸ்வதி, நர்மதை, சிந்து, காவேரி என்ற ஏழு நதிகளும் புனிதமானவை. இவைகளின் பெயரைக் கூறினாலே பாவம் போகும் என்பார்கள். இவைகளில் கங்கைக்கு சிவபெருமான் சம்பந்தமும், திருமாலின் தொடர்பும், தனிப்பட்ட நிலையில் ஏற்பட்டுள்ளது. ஸ்ரீ ஆதிசங்கரர் "கங்காஜல லவ கணிதா பீதா" என்று கூறி கங்கையின் புனித நீரின் ஒரு சொட்டு நீரைப் பருகுகிறவர்களுக்கு யம பயமில்லை என்றார். ஸ்ரீ ஆதிசங்கரர், நீலகண்ட தீக்ஷிதர், ஸ்ரீ ஜெகந்நாத பண்டிதன் போன்ற மகாகவிகள் கங்கையைப் பற்றிய மெய்சிலிர்க்கும் பெருமை கூறும் நூல்களை எழுதியுள்ளார்கள். "கங்கை" என்ற சொல்லிற்குக் கடவுளையும், மோக்ஷத்தையும் அடைய விரும்புவர்களுக்கு அடைவிப்பவள் என்றும், மோக்ஷம் விரும்புகிறவர்களால் அடையப்படுவள் என்றும் பொருளாகும். கங்கையின் பெருமையை வால்மீகியும், வியாசரும் மிகவும் சிறப்பாகக் கூறியுள்ளார்கள். புராணங்கள், தரும சாஸ்திரங்கள் போன்ற பழம் நூல்களிலும் இதன் பெருமை கூறப்பட்டுள்ளது. கங்கைக் கரையில் காசியில் சிவபெருமான் எழுந்தருளி இருந்து கங்கையில் இறப்பவர்களுக்கு காதில் இராம நாமம் ஓதுவதாகவும், கங்கைக் கரையில் ராம நாம ஜபம் செய்து கொண்டிருப்பதாகவும் காசி மஹாத்மியம் கூறும். ஆண்டுதோறும் ஐப்பசி கிருஷ்ண சதுர்த்தசி அன்று அதிகாலையில் வெண்ணீரில் கங்கையும், எண்ணெயில் இலக்ஷ்மியும் இருப்பார்கள் என்பதினால் தீபாவளியை கங்கா ஸ்னானம், லக்ஷ்மி பூஜை எனவும் அழைப்பார்கள். தீபாவளி ஸ்நானம் ஆனதும் ஒருவரை ஒருவர் "கங்கா ஸ்னானம் ஆயிற்று" என்று கேட்பதும் உண்டு. இத்தகைய சர்வ மங்களகரமான நன்னாளில் கங்கா ஸ்னானம் செய்துகங்கையின்சிறப்பினைப்படித்து நலம் பெறுவோம்.

இது இந்தியாவில் உள்ள பெரிய நதியாகும். உலகப் பெரிய நதிகளில் ஒன்றாகும். சமயத் தொடர்புடையது. இதன் நீளம் 1,557 மைல். தென் இமய மலையில் "கங்கோத்திரி" எனும் இடத்தில் கடல் மட்டம் 13,800 அடி உயரத்திற்கு மேல் உள்ள பனிக்குகையில் பாகீரதி என்ற பெயருடன் உற்பத்தியாகிறது. இத்துடன் ஜான்னவீ, அளகநந்தா என்ற ஆறுகளும் சேர்ந்து கங்கையாகிறது. இது "சுகி" என்ற இடத்தில இமய மலையைத் துளைத்துக்கொண்டு தென் மேற்கில் திரும்பி "ஹரித்துவாரம்" என்ற இடத்தை அடைகிறது. இது உத்திரபிரதேசத்தில் ராம கங்கையுடன் கலக்கிறது. இது பிரயாகையில் (அலகாபாத்தில்) யமுனை நதியுடன் கலக்கிறது. அங்கு சரஸ்வதி என்ற நதியும் அந்தர்வாஹினியாக இந்த இரண்டுடன் கலக்கிறது. அந்த இடத்திற்கு "திரிவேணி" ஸங்கமம் என்ற பெயர் ஏற்பட்டது. இடை இடையே பற்பல சிற்றாறுகள் கலக்க, காசி வழியாக ஓடி வங்காளத்தின் எல்லையைச் சேர்ந்து "ராஜ்மகால்" என்றகுன்றுகளின்இடையேஅடித்துக்கொண்டு "கௌர்" என்ற சிதைந்த நகரத்திற்கு 20 மைலுக்கு அப்பால் பல கிளைகளாக அமைந்து கழிமுகமாகிறது. இக்கழிமுகம் வங்காள விரிகுடாவிலிருந்து 300வது மைலில் தொடங்குகிறது. பிறகு வங்காளக் கடலில் பல கிளைகளுடன் கலக்கிறது. மேற்குக்கோடியில் இருப்பது கல்கத்தாவின் "ஹுப்ளி" என்ற கழிமுகமாகும். இதில்தான் கடலிலிருந்து 80 மைல் தொலைவில் மாபெரும் கல்கத்தா நகரம் உள்ளது. கடலிலிருந்து 1300 மைல் தூரம் வரை கங்கையில் நடுத்தரக் கப்பல்களும் கல்கத்தாவரை கடலில் செல்லும் பெரிய நீராவிக் கப்பல்களும் செல்கின்றன. கங்கையாற்றின் நீர் பரவும் நிலத்தின் பரப்பு 4,32,480 சதுர மைல்களாகும். இது ஒரு பெண் ஆறாகும். வெண்மை நிறமுள்ளவள் கங்கை. இவளுக்கு கங்கா,

## மனத்தை வழிப்படுத்தும் பயிற்சி

**பிரத்தியாகரா :**

நாம் இது வரையில் என்னென்ன காரியங்கள் செய்தோமோ அதன் வழியே ஓடிக்கொண்டிருக்கும் மனத்தை, முதலில் அந்த வழியில் ஓடவிடாமல் திருப்புவது. இப்படி நாம் விரும்புகிற நல்ல மாற்று வழிக்கு திருப்பி அமைக்கும் முயற்சி. இது முதல் நிலை.

**தாரண :**

நாம் இப்படித் திருப்பிவிடும் மனத்தை ஏதாவது ஒரு பொருளைக் குறியாக வைத்துக் கொண்டு அதன்மீது நிறுத்தி வைக்கப் பழக வேண்டும். இது ஒரு விக்கிரகமாகவோ, படமாகவோ, சக்கரமாகவோ இருக்கலாம். இப்படி நினைவை நிலை நிறுத்துவது இரண்டாவது நிலை.

**தியானம் :**

மனம் எங்கிருந்து புறப்பட்டதோ, அங்கேயே திரும்பச் செய்து ஒடுங்க வைப்பதுதான் இப்பயிற்சி. மனம் என்பது நம்முடைய உயிராற்றல்தான். உயிர்ச் சக்தியின் படர்க்கைதான் மனமாக நிலை பெறுகிறது. புலன்களின் வழியே சென்ற மனத்தை மீண்டும் உள்ளே வாங்கிக் கொள்வதுதான் மூன்றாவது நிலை.

**சமாதி :**

அதன் பிறகு எல்லாவற்றுக்கும் மேலான மெய்ப் பொருளுடன் மனத்தை ஒன்றவைத்து, நாமும் அதுவாக மாறிவிட வேண்டும். இந்த நிலையைத்தான் 'சமாதி' என்று சொல்லுகிறார்கள். இப்படி இறைவனுடன் ஒன்றி விடுவதுதான் மனப்பயிற்சியில் முடிவானது!

நமது முன்னோர்கள் மனத்தை வழிப்படுத்த இந்த நான்கு விதமான பயிற்சிகளை முற்காலத்திலேயே ஏற்படுத்தி வைத்திருக்கிறார்கள்.

(மன வளக்கலை என்ற நூலிலிருந்து) தொகுத்தவர்:

கமலா மாரியப்பன்-கோவை.

---

விஷ்ணுவதி, ஜான்னவீ, திவ்யாபகா, ஸுரநதி, பாகீரதி, த்ரிபதகா, த்ரிஸ்ரோதா, பீஷ்மஸு, மந்தாகினி, போகவதி, ஹைமவதி என்றெல்லாம் பெயர்கள் உள்ளன.

இந்தியாவில் ஆங்காங்குள்ள ஆறுகள் தெய்வத்தன்மையுள்ளனவாகப் போற்றப்படுகின்றன. இந்த ஆறுகளில் மிக முக்கியமானவை ஏழு. இந்த ஏழு ஆறுகளுள் கங்கைக்கு ஒரு தனிச் சிறப்பு ஏற்பட்டுள்ளது. இந்து மதத்திற்கு இக்கங்கை நதி உயிர் நாடி போன்றது. வட நாட்டார் இந்த கங்கா நதியை "கங்காமாயீ" என்று பக்தியுடன் அழைக்கிறார்கள். இதில் நீராடுகிறவர்கள், கண்ணால் இந்த ஆற்றை தரிசிப்பவர்கள், 'கங்கா' என்ற பெயரை பக்தியுடன் கூறுகிறவர்கள் அனைவருடைய பாபங்களைப் போக்கித் தூய்மையையும், மெய்யறிவையும், மோக்ஷம் என்ற வீட்டின்பத்தையும் அளிக்கவல்லது என்றுபல புராணங்கள்விரிவாக எடுத்தியம்புகின்றன. எல்லா மங்கள ஸ்நானத்திற்கும், "கங்கா ஸ்நானம்" என்ற புனிதப் பெயர் விளங்கி வருகிறது. இந்துக்கள் தாம் பருகும் புனித நீரை "கங்காமிருதம்" என்றே அழைப்பார்கள். வாழ்க்கையின் முடிவுள்ள காலத்தில் மக்கள் கங்கைக்குச் செல்ல வேண்டும். அதன் கரையில் வசிக்க வேண்டும் என்று வைதீக இந்துக்கள் விரும்புவார்கள்'

கங்கைக்கு தேவ நதி என்றும் பெயர் உண்டு. கங்கை முதலில் விண்ணுலகிலேயே தோன்றிப் பின்பு பூமியில் இறங்கிப் பின் பாதாளத்திலும் பெருகுவதால் த்ரி—பத—கா (மூன்று வழியில் செல்பவள்) என்றும் பெயர். வானத்திலிருந்து இந்த மா நதி பூமிக்கு வந்த வரலாறுகளில் இருவகையுண்டு. இராமாயணத்தில் இராம, லக்ஷ்மணர்களுக்கு விசுவாமித்ரர் கங்கையின் கதையைப்பாதையில் வழிக்களைப்பு இல்லாமல் இருக்கக் கூறியதாகக் கூறப்பட்டுள்ளது.

கங்கை இமயமலையின் மகளாய்த் தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க வானத்திலேயே தங்கி வந்தாள். அயோத்தியை முன்பு அரசாண்ட "சகர மகா ராஜன்" அஸ்வமேதவேள்வியைத் தொடங்குவதற்கு முன், இந்திரன் அந்த வேள்விக் குதிரையைத் திருடிக் கொண்டுபோய்ப் பாதாளத்தில் அப்பொழுது தவம் செய்துகொண்டிருந்த கபிலர் என்ற முனிவரின் அருகில் விட்டுவிட்டு மறைந்துவிட்டான். சகரனுடைய 60,000 பிள்ளைகளும் அங்கு வந்தார்கள். அங்குக் கபில முனிவருடைய அருகில் தமது தகப்பனாரின் வேள்விக் குதிரையைக் கண்டதும், அவர்கள் இக் கபிலரே இக் குதிரையைத் திருடினார் எனப் பிசகாக நினைத்து அவரைத் தாக்கினர். கண் விழித்துணர்ந்த கபிலர் தமது தவ நெருப்பால் அவர்களைச் சாம்பலாக்கினார். அதன் பின், சென்ற தமது பிள்ளைகள் திரும்பி வராததினால், வருத்தமுற்ற அரசன் தனது மூத்த மனைவியின் மகனை அஸமஞ்ஜனை அனுப்பிச் சகர புத்திரர்களைத் தேடச் செய்தான். அஸமஞ்ஜன் தேடிப் பின்னர் குதிரையைப் பாதாளத்தில் கண்டும், கங்கை நீரில் இறந்த சகோதரனின் சாம்பலைக்கரைக்க வேண்டும் என்ற செய்தியைக் கருடன் மூலம்

அறிந்ததும் தன் தகப்பன் சகரனிடம் செய்திகளைக் கூறினான். சகரன் இச் இச்செய்திகளை அறிந்து வருந்தி, பிறகு குதிரையைக் கொண்டு வந்து தனதுவேள்வியை நடத்திமுடித்தான். சகரனுக்குப் பிறகு "அம்சுமான்" என்ற அரசன் பெரும் பாடுபட்டுக் கருடன் கூறியபடிக்குத் தன் முன்னோர்களின் சாம்பலைக் கரைக்கக் கங்கை நதியைப் பூவுலகம் கொண்டு வர இயலாமலேயே இருந்தான். அவனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்த "பகீரதன்" என்பவனே, தனது கடும் தவத்தால், முதலில் பிரமனையும், பிறகு சிவபெருமானையும், கங்கையையும் மகிழச் செய்து, கங்கையைப் பூமிக்குள் கொண்டு வந்து, அதன் பின் பாதாளத்திற்கும் அக்கங்கையைக் கொண்டு சென்று, தம் முன்னோர்களின் சாம்பலை அப்புனித நீரில் கரைத்து முன்னோர்களின் ஆன்மா சாந்தி அடையச்செய்தான். இதனால் தான் கங்கைக்குப் "பாகீரதி" என்ற பெயர் ஏற்பட்டது. பகீரதனுடைய எல்லையற்ற முயற்சியைஎடுத்துக்காட்டாகக் கொண்டு "பகீரதப் பிரயத்னம்" என்ற பழமொழியும் இன்று உலகில் வழங்கப்பட்டு வருகிறது. வானிலிருந்து வேகமாக விழும் கங்கா நதியைச் சிவபெருமான் தன் ஜடையில் தாங்கித் தரையில் விட்டதால் சிவபெருமானுக்கு "கங்காதரன்" என்ற பெயரும், கங்காதேவியை சிவபெருமானின் மனைவி என்றும் பெருவழக்காக ஏற்பட்டன. சிவபெருமானின் சடையில் இருந்து விடுபட்ட கங்கை ஏழு அருவிகளாகப் பெருகினாள். இதனால் "ஸப்த கங்கை" என்று கங்கைக்குப் பெயர் ஏற்பட்டது. அந்த ஏழு நதிகளாவன; 1. ஹராதினி, 2. பவானி, 3. நளினி, 4. ஸுசக்ஷுஸ், 5. சீதா, 6. சிந்து, 7 கங்கா பாகீரதி என்பன. இவைகளில் முதல் மூன்றும் கிழக்கு முகமாய்ப் பெருகி ஓடியவை. பின் மூன்று நதிகளும் மேற்கு முகமாய் ஓடியவை. கடைசியான "கங்கா பாகீரதி" என்பது தெற்கு முகமாய் ஓடியது. இந்த கங்கை பூவுலகில் வரும்பொழுது "ஜந்து" என்ற முனிவரின் வேள்வியை அழித்தாள். அதனால் சினம் கொண்ட "ஜந்து" முனிவர் அவளைப் பருகிவிடவே, பிறகு பகீரதன் செய்த தவத்துக்கு மகிழ்ந்து தமது வலது காதால் அந்தக் கங்கையை விட்டார். அதனால் கங்கைக்கு 'ஜான்னவி' என்ற பெயரும் ஏற்பட்டது. 'ஜன்னு' மகரிஷியின் ஆசிரமே இன்று 'சுல்தான் கஞ்சு' என்ற இடத்தில் உள்ளது. இந்தக் கங்கையாறு வானத்தில் செல்லும் பொழுது மந்தாகினி என்ற பெயரையும், பூமியில் ஓடுகையில் "கங்கை" என்று பெயர் கொண்டதாகவும், பாதாளத்தில் ஓடும் பொழுது 'போகவதி' என்ற பெயரையும் பெற்றதாக பாகவதப் புராணம் கூறுகிறது.

ஸ்ரீபாதகங்கையின் தோற்றத்தைப் பற்றிப் பாகவத புராணம் மற்றோர் முறையில் கூறுகிறது. வாமனவதாரம் எடுத்ததிருமால், உடனேஉலகளந்தானாகி,த்ரிவிக்ரம அவதாரமும் காட்டினார். அப்போது திருமாலின் திருவடி சத்தியலோகம் வரை சென்றுபிரமன் பக்கம் தென்பட்டது. உடனே திருமாலின் திருவடி, தன் பக்கம் வருவதைக்கண்ட பிரமன், அத்திருவடிக்கு உபசாரமாகத் தன் கமண்டலுவின் நீரால் 'பாத்யம்' என்ற திருவடி நீரால் அலம்பிவிட்டார். அப்பொழுது அந்த நீரும் பெரிய திருமாலின் பாதத்தை அலம்பப் போறுது போக தரும தேவதையை நீராக்கி அந்நீரால் திருமால் திருவடியில் இட்டார். அப்பொழுது திருமாலின் திருவடி வழியாக பெருகிய நீருக்கு 'விஷ்ணுபதி' என்றும், 'ஸ்ரீ பாத தீர்த்தம்' 'பாதோ தகர்' என்றும் பெயர்கள் ஏற்பட்டன. அவளே கங்கை என்றும் கூறப்படுகிறது. இந்த இரண்டுவிதமான கங்கைக்கதைகளை தனித்தனியாக படித்துப் பூசலின்றிப் பெருமை உணர வேண்டும். அந்தக் கங்கை வானிலிருந்து பூமிக்கு வந்த விதத்தை இன்றும் வேறுவிதமாகவும் கூறுவார்கள். திருவிக்கிரமாவதாரத்தில் திருமாலுடைய திருவடியின் நகம் பிரமாண்டம் என்ற உலகின் முகட்டிலே குத்த, அந்த முண்டு பொத்தலாகிறது. அந்த ஓட்டையில் இருந்து கங்கை நீர் பூவுலகில் விழுந்து பெருகலாயிற்று.

வானிலிருந்து வழிந்து பின் மேரு மலையில் விழுந்து, பிருமலோகம் அடைந்து, அங்கிருந்து 'சீதா' 'அளக நந்தா' 'வங்ஷு' 'பத்திரா' என்ற பெயர்களால் நாற்றிசையும் நாடிக் கடைசியில் கடலில் கலந்தது. இவற்றுள்' அளகநந்தையே' நம் பரத கண்டத்தில் (இந்தியாவில்) பாய்ந்த மகா நதியாகும்.

கங்கைப் பூவுலகில் இறங்கியதாகக் கூறப்படும் நாள், வைகாசி சுக்கில பட்சம் திருதியை செவ்வாய்க்கிழமை ஹஸ்த நட்சத்திரமாகும்.

கங்கை பாயும் இடம் தூய்மைப் பெற்றதாகக் கூறப்படுவதால் பல முனிவர்களின் ஆசிரமங்கள் கங்கைக் கரை ஓரங்களில் ஏற்பட்டன. அவைகளையே இன்று புனிதமான இடங்களாக நாம் கருதி வழிப்பட்டு வருகிறோம். கங்கை ஓரங்களில் உள்ள நிழலடர்ந்த இன்பமான சோலைக் காட்சிகள் மாளாத இன்ப உணர்ச்சியை உண்டு பண்ணுபவன. கங்கைக் கரையில் சித்த புருஷர்கள் தங்கிப் பின் வைகுந்தம் செல்வதால் இது 'சித்த நதி' யாகும். ஓரப் பகுதிகளில் தலை சிறந்தது கங்கை உற்பத்தியாகும் 'கங்கோத்ரி' யாகும். கங்கை தென்படும் இடமான 'கங்காத்துவாரம்' என்ற ஹரித்துவாரமும், ப்ரயாகையும், காசியும் மிகவும் புண்ணிய ஸ்தலங்களாக கருதப் படுகின்றன. இந்தக் கங்கையின் புதல்வர்களாகக் கருதப்பட்டு வந்த பீஷ்மரையும், முருகனையும் 'காங்கேயர்' என்று அழைக்கிறோம்.

கங்கையில் நீராடுவது, அதன்கரையிலும், அக்கரைகளிலுள்ள சில முக்கியமான ஸ்தலங்களிலும் இறந்த முன்னோர்களுக்குத் திதி செய்வது முதலியவைகளை இந்துக்கள் செய்து வருகிறார்கள். சிலர் இப்புனித நீரில் மூழ்கி உடலையும் விடுவது உண்டு. வேதாந்த அறிவு நிறைவு பெறாதவர்கள் இக்கங்கையில் விழுந்து உடலை நீத்தால் மோட்சம் உண்டு என்று சிலர் நம்புகிறார்கள். ஸ்காந்த புராணத்தில் காசி காண்டம் முழுவதும் கங்கையின் மான்மியம் விரிவாகக் கூறப்பட்டு உள்ளது. காசி யாத்திரை விதி, பஞ்சக்குரோச மகாத்மியம் முதலிய நூல்களும் கங்கை யாத்திரையின் சிறப்பைப் பேசுகின்றன. வைதீகர்கள் 'காசி-கங்கா' என்று சொல்லிக் கொண்டே கங்கையில் மூழ்குவார்கள். கங்கை யாத்திரை ராமேஸ்வர யாத்திரையோடு முடிவதால், கங்கை நீரைக் கொண்டு இராமேஸ்வரத்து லிங்கத்துக்கு அபிஷேகம் செய்வோர்களும் உண்டு. கங்கை ராமேஸ்வர யாத்திரையின் பிணைப்பு, இந்தியாவின் ஒற்றுமையை உண்மையை எடுத்துக் காட்டும். கங்கை, காயத்திரி, கீதை, என்ற மூன்று 'க' எழுத்துக்களுக்கும் மேம்பட்டது ஏதுமில்லை என்று வடமொழி நூலார் கூறுவர். கங்கை, யமுனை, சரஸ்வதி என்ற மூன்று புனித ஆறுகளின் சேர்க்கையான திரிவேணியை இடை, பிங்களை, சுஷும்ணை என்று யோக சாஸ்திரங்களில் பேசப்படும் யோகப் பயிற்சிக்கு அடிப்படையான மூன்று நாடிளாகும், இவள் வடிவம், வலது கையில் கருநெய்தல், இடது கையில் பூர்ணகும்பம், முதலைவாகனம் ஆகியவற்றைக் கொண்டதாக இருக்கும். இவள் உலகில்உள்ள மூன்றரைக் கோடி புண்ணிய தீர்த்தங்களின் பலனை ஒருமிக்கத் தரக் கூடியவள். பார்வதிதேவி ஒரு சமயம் சிவபெருமானுடைய கண்ணைப் பொத்தவும் அப்பார்வதியின் விரல்களின் இடை வழியே மலையில் பெருகினள் எனவும், இவள் பிரமன் சபைக்கு வந்த பொழுது உண்டான சாபத்தால் சந்தனுவின் மனைவியாய் பீஷ்மரைப் பெற்றாள் என்றும் கூறுவது உண்டு. இவள் சிவமூர்த்தியை மணக்க விரும்புவதை பார்த்த பார்வதிதேவி குறிப்பால் உணர்ந்து 'இரேணு' என்பவனுக்கு மகளாய்ப் பிறக்க சாபமும் அமங்கலமும் பெற்றுப் பிறகு தவத்தால் அதைப் போக்கிக் கொண்டாள். சூரபத்மன் வேள்வியை அழிக்க சிவபெருமானால் பூமிக்கு கொண்டு வர பட்டவள் இவள்.

இந்தக் கங்கையின் பெருமையைப் படிக்கும் பெண்களுக்கு மாங்கல்ய பாக்யம் வளரும் என்றும், மனைவி புருஷன் ஒற்றுமை ஓங்கும் என்றும் கருதிச் சிலர் இவள் பெருமையை வெள்ளிக்கிழமை தோறும் மற்றும் தீபாவளி நீராட்டம் ஆனதும் படிப்பதும் பழங்கால வழக்கமாகும்.



## வடக்கே முருகன் கார்த்திகேயனாக விளங்குகிறார்

பரமசிவனின் கண்களிலிருந்து ஆறு பொறிகள் வெளி வந்து சரவணப் பொய்கையில் தங்கி ஆறுமுகனாக உருக்கொண்டன. அப்பொழுது கார்த்திகைப் பெண்கள் கிருத்திகா தேவதைகள் என்கிற ஆறு பேர்கள் ஆறுமுகனை எடுத்துப் பாலூட்டி வளர்த்தனர். அவர்கள் முருகனைப் பாலூட்டி வளர்த்ததால் அவருக்கு கார்த்திகேயன் என்ற நாமம் கிடைத்தது. தனக்கு தாய் மாதிரி இருந்தவர்களின் பெயரை வைத்தே அப்படி அவர்களுக்கு பெருமையாக பெயர் தாங்கினார். வடக்கே முருகனுக்கு இப்பெயர்தான் வழங்குகிறது. கார்த்திகேயன் என்றால் அங்கே சுப்ரமண்யர்தான். கார்த்திகேய பெண்கள் அறுவரும் வானத்தில் நட்சத்திர வடிவமாக மாறினார்கள். ஆறு நட்சத்திரங்கள் ஒரு வட்டமாகத் தோன்றும். அவர்கள் நிரந்தரமாக ஆகாயத்தில் எல்லோருக்கும் தெரியும்படியாக இடம் பெற்றனர்.

—எம். சே. நாமகிரி ஸ்ரீநிவாசன்-சென்னை.

# தமிழ் நாட்டில் வைணவம் - தோற்றமும் வளர்ச்சியும்

மா அயோயே ! மா அயோயே !
மறுபிறப்பு அறுக்கும் மாசில் சேவடி
மணிதிகழ் உருபின் மாயோயே !

(பரி. 3)

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்தில், திருமால் வழிபாடு பன்னெடுங்காலமாக வழக்கில் இருந்து வருகிறது. தமிழக வரலாற்றின் தொடக்க காலமாகிய சங்க காலத்தில் (கி. மு. 300-கி.பி. 300) பலவகையான வழிபாட்டு நெறிகள் தமிழரிடையே சிறந்துவிளங்கின. அவற்றுள் ஒன்றுதான் திருமால் வழிபாட்டுநெறி. அன்றைய தமிழகத்தில், கேட்பாட்டு அடிப்படையில் முறைப்படுத்தப்பட்ட சமூக நிறுவனமாக, எச்சமயமும் வளர்ச்சியுறவில்லை. வழிபாட்டு (cults) நெறிகளாகவே, இரு வேறு சமயச் சிந்தனைகள் உருவாகிக் கொண்டு இருந்தன. எனவே, அக்காலத்தில் திருமால் வழிபாட்டு நெறிக்கோ, சிவ வழிபாட்டு நெறிக்கோ தனித்தனியான பெயர்கள் வழங்கப்படவில்லை.

**வைணவ விளக்கம் :**

'வைணவம்' என்பது திருமால் வழிபாட்டு நெறிக்கு ஆழ்வார்கள் சூட்டிய திருப்பெயராகும்.

மணிமேகலை எனும் காப்பியத்தில் முதன்முதலாக இந்தியச் சிந்தனையின் அறுவகை தரிசனங்களைப்பற்றிய பெயர்களும், விளக்கங்களும் 'சமயக் கணக்கர் தம் திறங்கேட்ட காதையில்' காணப்படுகின்றன. அதில் 'சிவனை' வழிபடுவோர் 'சைவர்' எனும்குறிப்பு காணப்படுகிறது. ஆனல், திருமாலை வழிபடுவோர்க்கு உரிய இப்பெயர் குறிப்பிடப்படவில்லை.

''காதல் கொண்டு கடல்வணன் புராணம்
'ஓதினன்' நாரணன் காப்பு' என்று உரைத்தனன்'

(மணி. 27. 98-99)

என்பதே அதில் காணப்படும் வாசகம். இதனல், திருமால் நெறியனர் ஆர்வத்தோடு, கடல் நிற வண்ணனுகிய திருமாலின் புராணத்தை ஓதினர்; 'நாரணன் காக்கும் தெய்வம்' எனும் கருத்து உடையவர்களாக விளங்கினர் என்பதையே அறிய முடிகிறது. ஆழ்வார்கள் காலத்திற்கு (கி. பி. 500-900)ச் செல்லுகின்ற பொழுது தான்,

''வன்மை யாவதுன் கோயிலில் வாழும்
'வைட்ட ணவன்' என்னும் வன்மை கண்டாயே!''

(நா. திவ். 435)

எனும் பெரியாழ்வார் திருமொழிப் பாசுர அடிகளில், 'வைட்டணவன்' எனும் பெயரைக் காணுகின்றோம். இச்சொல்லிற்குத் 'திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடுவன்' என்பது பொருளாகும்.

'வைணவம்' எனும் பெயர் திவ்விய பிரபந்தத்தில் காணப்படவில்லை. வேதாந்த தேசிகரின் (15 நூ. ஆ) 'பன்னிரு நாமத்தில்', 'வைணவம்' எனும் சொல்லாட்சி இடம் பெற்று இருப்பதாக அறிஞர் கூறுவர். (தேசிகப் பிரபந்தம், ப. 212.)

பேராசிரியர் : க. த. திருநாவுக்கரசு.
சென்னை.

சமஸ்கிருத மொழியிலேயே 'வைஷ்ணவம்' எனும் சொல் மிகப் பிற்பட்ட காலத்தில்தான் வழக்கிற்கு வந்தது என்பர். பாரதத்தின் கடைசி பருவதத்தில்தான் அச்சொல்



திருவெள்ளக்குளம் ஸ்ரீநிவாசப்பெருமாள் — மயூரப்பிரியா, சென்னை.

முதன் முதல் இடம் பெற்று இருப்ப தாகக் கூறுவர். (G. M. Bhattacharya, 'Vaishnava Literature in the Cultural Heritage of India, vol. V, p. 107, F.N. 1)

இவற்ருல் நெடுங்காலமாக வழக்கில் இருந்து வந்த திருமால் வழிபாட்டு நெறியைப் பிற்காலத்தில், 'வைணவம்' எனும் பெயரால் சுட்டும் வழக்கம் தமிழ் நாட்டில் தோன்றியதை அறிகிருேம்.

1. வைணவத்தின் தோற்றம்

'வைணவ சமயம் இந்தியாவில் எப்பொழுது தோன்றியது?' என்பதைப் பற்றி அறிஞர்கள் இடையே கருத்து வேற்றுமை இருந்து வருகிறது. 'ஈரடியால் மூவுலகு அளந்த செய்தி' வேதத்தில் இடம் பெற்று இருக்கிறது. எனவே, வேத காலத்திலேயே வைணவ சமயம் அரும்பி விட்டது என்பர் பி. வி. இராமானுஜம். (History of Vaishnavism in S. India upto 600 A.D. B. V. Ramanujam, p. 120.) 'வாசுதேவ வழிபாட்டு நெறி மத்துராவில், சமய பௌத்த சமயங்களுக்கு எதிர்ப்பு இயக்கமாகக் கிறித்துவ நூற்ருண்டிற்கு முற்பட்ட சில நூற்ருண்டுகளில் தோன்றியதாகும். படிப்படியாக வாசுதேவரை விஷ்ணுவோடும் நாராயணனேடும் இணைத்து, ஒன்றெனக் காணும் வழக்கம் தோன்றியது. (G. M. Bhattacharya, op cit. p. 107, F.N. 1.) என்பது கோவிகா மோகன் பட்டாச்சாரியாவின் கருத்தாகும்.

அங்கிருந்து மராட்டிய மாநிலத்தின் வழியாகத் தமிழ் நாட்டிற்கு இவ்வழிபாட்டு நெறி சென்று பரவி இருக்க வேண்டும் என்று பந்தரிக்கர் தெரிவித்துள்ளார். (R. G. Bhandarkar, Vaishnavism, Saivism and Minor Religious Sects. p. 68.)

ஆனல், தமிழ் நாட்டைச் சேர்ந்த பி. வி. சீனிவாச ஐயங்கார், தேவநேயப் பாவாணர் போன்ருேர், "கிருஷ்ண" எனும் சொல்லிற்கு 'கருமை' என்பது பொருள். கண்ணனைக் 'கார்மேனி வண்ணன்' எனப் போற்றுவர். அவன் தமிழ் நாட்டு தென் நாட்டு மக்களுடைய தெய்வமாகத்தான் இருக்க வேண்டும்" என்பர். (G. M. Bhattacharya, op. cit, p. 107, F. N. 1.)

இவ்விரு கருத்துகளுள், பெரும் பாலோர் வட இந்தியாவில் தோன்றிய 'பாகவத நெறி' தான் பையப் பையத் தென்னுட்டில் நுழைந்து இருக்கக்கூடும் என்பதையே வலியுறுத்துகின்றனர்.

மாயோன் யார் ?

பழந்தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியத்தில் 'மாயோன் மேய காடுறை உலகமும்' என்னும் நூற்பாவில், (தொல். அகத். 5) திருமால் முல்லை நிலத்தெய்வமாகக் குறிப்பிட்டுள்ளார். ஏறக்குறைய இப்பெயராலேயே பல இடங்களில் அந்தத் தெய்வம் சங்க இலக்கியங்களில் சுட்டப்படுகிறது. 'மா' எனும் தமிழ்ச் சொல்லிற்குக் 'கருமை' என்பது பொருள். கரு நிறக் கடவுளால் திருமாலையும் வண்டினையும் இச்சொல் சுட்டுகிறது. மாயோன், 'மாயன்' எனவும் 'மாயவன்' எனவும் சுட்டும் வழக்கம் உண்டு.

"ஆயிரம் விரித்த கைம் மாயமள்ள"

(பரி. 3.41)

"மாயவன் மார்பில் திருப்போல்"

(கலித். 145–64)

எனும் பாடற் பகுதிகளில் வழங்கும் இவ்விரு சொற்களும் 'மா' எனும் பகுதியடியாக அமைந்தனவேயாகும்.

'மாயவன்' எனும் தமிழ்ச் சொல் 'மாயம்' (magic) எனும் வடச் சொல்லின் வழி அமைந்தது அன்று. தமிழில் திருமாலுக்கு வழங்கும் இயல்பான பெயராகவே இதனைக் கருதலாம்.

சங்க காலத்து மக்கள், முல்லை நிலத்துத் தெய்வமாக மாயோனைப் போற்றி வழிபட்டுள்ளனர். இங்குச் சுட்டப்படும் மாயோன், ஆயர் குலத்தில் தோன்றிய கண்ணனையேயாகும்.

தமிழகத்தில் வளர்ச்சியுற்ற நானிலத்து ஐந்திணைப் பண்பாட்டில் முல்லை நிலத்து மக்களின் வழிபடு தெய்வமே 'மாயோன்' என்பதை முன்னரே கண்டோம். இந்த 'மாயோனை' இளங்கோவடிகள்,

"கரியவனைக் காணுத கண்ணென்ன
கண்ணே"

(சிலப். 17. பாட. 2)

என்று போற்றியுள்ளார். இவ்வழக்குகள் யாவும் 'கண்ணன்' எனும் தெய்வத்தையே சுட்டுகின்றன. சமஸ்கிருத மொழிச் சொல்லான 'கிருஷ்ண' என்னும் வேர்ச் சொல்லிற்குக் 'கருமை நிறம்' என்பதே மூல முதற் பொருள். இச் சொல்லடியாகவே, 'க்ருஷ்ணு' எனும் சமஸ்கிருதச் சொல் பிறந்ததாகவும், 'கருமை நிறமுடைய கடவுள்' என்பதே அச் சொல்லிற்குப் பொருள் எனவும் அறிஞர் கூறுவர். (John Dowson, A Classical Dtctionary of Hindu Mythology and Religion, p. 16/p. 775. (Khanna))

கண்ணன் என்னும் தமிழ்ச் சொல், "கரியோன்" எனும் பொருளதோர் (கிருஷ்ண) பாகவதச் சிதைவே "கண்ணன்" (திருக்கோவையார், 53, உரை, வடநாட்டில் கண்ணு (Khanna) எனும் பெயர் இன்னும் வழக்கில் உள்ளது) என்பது பேராசிரியர் எனும் உரையாசிரியர் கருத்தாகும். கிருஷ்ணு - கண்ணு (Khanna) எனும் முறையில் அமைந்த பிராகிருத மொழிச் சொல்லாகப் பேராசிரியர் கருதுகிருர்.

ஆனல் இவருக்குக் காலத்தால் முற்பட்ட ஆழ்வார்களில் பாசுரங்களில், 'கண் அன்னவன்' 'கண்ணன்' எனவும், 'அழகிய கண்களை உடையவன், 'கண்ணன்' எனவும் விளக்கம்

தரப்பட்டுள்ளமை பக்தி நிலைக்குரிய தாகும். (நா. திவ். பிர. 713,2774)

இந்தப் பின்னணியில் நோக்கினால், 'மாயோன்' எனும் பெயர், தங்கள் குல தெய்வத்திற்கு ஆயர்கள் இட்ட பெயராகவே தெரிகிறது. இத்தெய்வம், தமிழ் நாட்டு மக்களால் தொல் பழங்கால (புதிய கற்காலம்) முதல் வழிபாடு செய்யப்பட்டு வந்த தெய்வமாக இருத்தல் கூடும்.

அண்மையில் வெளிவந்துள்ள 'விரக பக்தி' எனும் ஆங்கில நூலில், முல்லை நிலத்து 'இருத்தல்' ஒழுக்கமாகிய ஆற்றி இருத்தலில் இருந்தே வைணவ 'பக்தி'யின் கரு உருவாகி இருக்க வேண்டும், நப்பின்னை – கண்ணன் காதல், முல்லை நில இனக்குழுத் தலைவர்களைப்பற்றியதாகும் என்றும், இந்த இலட்சியக் காதல் உணர்வே, பையப் பைய வளர்ந்து பக்தி நெறியாக மலர்ச்சியுற்றது என்றும் அறிஞர் பி. ஹார்டி மொழிந்துள்ளார். (B. Hardy, Viragha Bhakti, pp. 7–36)

'பின்னை தன் தோள்மணந்த பேராயனை' பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்,

"........................பிள்ளையாம்
பிரகதத்தைக்கு விடையேழ் தழுவின
வேங்கடவன்"

(திருவே. அந். 93)

என்று பாடியுள்ளார். இந்த அடிகளில் நப்பின்னையை, 'பிரகதத்தை' என்று குறிப்பிடப்பட்டுள்ளமை, அறிஞர் ஹார்டியன் கருத்திற்கு ஊற்றம் அளிப்பதாக உள்ளதைக் காணலாம்.

முல்லை நிலத் தெய்வமாகிய கண்ணனின் வழிபாட்டைப் பிற்காலத்தில் வட இந்திய திருமால் வழிபாட்டோடு இணைத்துப் பார்க்கும் பழக்கம், இரு வகைப் பண்பாடுகள் இணைந்த காலத்தில் தோன்றி இருக்க வேண்டும் எனக் கொள்ளுதலே பொருந்தும். இதனைப் 'பண்பாட்டு இசைவு நிலை' (Cultural Syncretism) என்பர். (பி. தி. சீநிவாச ஐயங்கார் அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் இக்கருத்தைத்தெரிவித்தார். Pre-Aryan Tamil Culture pp. 25–26. அடுத்து மில்டன் சிங்கர் (Miltonsinger)பதிப்பித்த Krishna myths Rituals & Attitudes எனும் நூலிற்கு அணிந்துரையில் டேனியல் இங்கல்ஸ் Danial HH Ingalls) இதைப்பற்றி மிக விரிவாக எடுத்துரைத்துள்ளார். அண்மையில் வெளிவந்துள்ள பி. ஹார்டியின் நூல் தர்க்க அடிப்படையில் இக்கருத்தை நிலை நாட்டுகிறது. இந்தப் பண்பாட்டுக் கலப்பு தொல்காப்பியர் காலத்தை (கி.மு. 300) ஒட்டி நடைபெற்று இருக்கலாம். (K. A. Nilakanta Sastri, Cultural contacts between Aryans and Dravidians, pp. 63–64.)

**பண்டைத் தமிழகத்தில் வைணவம் :**

தமிழக வரலாற்றில் தொல்காப்பியர் **காலம் முதல்** கி.பி. ஐந்தாம் **நூற்றாண்டு** முடிய உள்ள கால கட்டத்தைப் 'பண்டைக் காலம்' எனக் கொள்ளுவதில் தவறு இல்லை. இக் காலக் கட்டத்தினுள் சங்க காலம் (கி.மு. 300—கி.பி. 300) அடங்கி விடுகிறது. இந்தக் கால வரலாற்றிற்குப் பயன்படும் அடிப்படைச் சான்றுகளைப் பின்வரும் காலவரை முறைப்படி நம் ஆய்விற்கு அமைத்துக் கொண்டுள்ளேன். (1) தொல்காப்பியம் (2) அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, ஐங்குறுநூறு, புறநானூற்றில் பெரும் பகுதி, பதிற்றுப்பத்து. பத்துப் பாட்டு (3) கலித்தொகை, பரிபாடல், திருக்குறள், (4) சிலப்பதிகாரம், மணிமேகலை, களவழி, நாலடியார், பழமொழி போன்ற பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் சில.

தமிழருடைய பண்பாட்டு வளர்ச்சியில், நானிலத்து ஐந்திணைப் பண்பாடு தான் தனி நிலையில் படிப்படியாக வளர்ந்து, சிறந்து (Evolutionary) இருக்கிறது. அதற்குப் பிறகு பரிணாம வளர்ச்சியில் வேகம் குறைந்து விட்டது. பிற பண்பாட்டின் 'விரவிப் பரவுதல்' (Diffusion) தாக்கத்தால் உண்டான வளர்ச்சியே தமிழ் நாட்டில் மிகுதியாக இருக்கிறது. வைதிக, சமண, பௌத்த சமயச் சிந்தனைகளின் தாக்கத்தால் கிறித்துவ நூற்றாண்டின் தொடக்கம் முதல் உண்டான பண்பாட்டு வளர்ச்சியில் காணப்படும் புதுமைப் போக்குகளைக் கருத்தில் கொண்டு, வைணவ சமயத்தின் வளர்ச்சியைக் காண்போம்.

**திருமாலிற்குப் பல பெயர்கள் :**

'மால்' எனும் சொல்லிற்கும் 'கருமை' என்பதே பொருள்.

"மரம்செல மிதித்த மா அல் போல"

(அகநா. 59)

இச்சொல், ஆழ்வார் காலத்தில் பெரு வழக்கிற்கு வந்தது.

அடுத்து 'நெடியோன்' (பெரும் பாண். 402. சிலப்பதி 5.172) எனும் பெயர் திருமாலைக் குறிக்க வழங்கப் பட்டுள்ளது. 'மணிவண்ணன்' (சிலப். 10.10.) 'கடல் வண்ணம்' (மணி. 27–98.) காயாம்பூ வண்ணன் (சிலப் 16.97) எனும் பெயர்கள் திருமாலின் கருநீல நிறத்தைச் சுட்டுவனவாக உள்ளன.

'கடவுள்' (தொல். பொருள். 88) எனும் சொல்லாலும் திருமால் குறிப்பிடப்படுகிறார். மனிதனின் உள்ளம், உரை, சொல் முதலியவற்றைக் கடந்து நிற்பவர் எனும் பொருளிலும், மனிதனின் அறிவு உணர்வுகளைக் கடவுபவர் (இயக்குபவர்) எனும் பொருளிலும் இச்சொல் வழங்கப்பட்டுள்ளது. வேதத்தின் ஆறு அறிவுகளையும் அறிந்தவன் எனும் பொருளில் 'ஆறறி கடவுள்' என்று பரிபாடல் குறிப்பிடுகிறது. 'விஷ்ணு' என்பதற்குத் தமிழ்ச் சொல்லாக்கமான 'விண்டு' (புறநா 391) எனும் சொல் பாடிய தமிழ்ப் பாடல்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

'ஆல் அமர் கடவுள்' எனும் பெயரால், ஆலிலை மேல் அமர்ந்துள்ள கண்ணனைச் சங்கச் சான்றோர் சுட்டியுள்ளார். பொதுவாகச் சங்கப் பாடல்களில் 'ஆலமர் செல்வன்', 'ஆலமர் கடவுள்' எனும் தொடர்கள் தட்சணாமூர்த்தியையே குறிக்கும். ஆனால், இங்கு இச்சொல்லாட்சி, திருமாலையே சுட்டுகிறது.

'வேத முதல்வன்' (பரி 3.42.47) 'தாமரைக்கண்ணன்' (திருக். 1103,) 'நாரணன்' (மணி 27.99) 'நாராயணன்' (சிலப். 27. படர். 15.) எனும் பெயர்களாலும் சங்க காலத்தின் கடைப்பகுதியில் வாழ்ந்த தமிழர்கள் திருமாலை அறிந்து இருந்தனர். மற்றும் 'திருமறுமார்பன்' (பெரும்பாண். 31, கலி. 104.) 'திரு அமர்மார்பன்' (சிலப். 11.40.) புள்ளிசை கொடியோன்' (பரி. 8.2) 'அரவணைக்கிடந்தோன்' (சிலப். 30.51) 'துழாயான்' (பரி. 15.15) 'திகிரியோன்' (நற் கடவு) 'நேமியான்' (கலி. 15, 72, 110, 3, 127.4, 11.134.) என்பன போன்ற பல்வேறு பெயர்களும் திருமாலுக்கு உரியனவாக வழங்கப்பட்டுள்ளன.

பழந்தமிழ் இலக்கியத்துள் வழங்கும் இப்பெயர்கள் யாவுமே, யாதாகிலும் ஒரு காரணத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்த பெயர்களாக உள்ளன இவற்றால் திருமாலினுடைய பல்வேறு இயல்புகள் புலனாகின்றன.

**திருமாலின் திருக்கோலம் :**

திருமாலின் தலையாய தொழில் காத்தலாகும். இதனைத் தொல்காப்பியர்,

"மாயோன்மேய மன்பெருஞ் சிறப்பின்
தாவா விழுப்புகழ் பூவை நிலையும்"
(தொல். புறத். 5)

என 'அரசனுடைய காத்தல்' தொழிலுக்கு உவமையாகக் கூறியுள்ளார்.

"திருமால் உலகையே சேவடியாக உடையவர்; சங்குகள் ஒலிக்கும் கடலையே உடையாக உடையவர்; வானமே உடலாக உடையவர், திசைகள் அவருக்குக் கைகளாக விளங்குகின்றன; செங்கதிரும் தண்மதியும் இருவிழிகளாக விளங்குகின்றன. இப் பேரண்டத்திற்குட்பட்ட அனைத்தையும் பயின்று தம் அகத்துள் அடக்கிய வேத முதல்வன் அவர்" என்று நற்றிணையில் கடவுள் வாழ்த்துப் பாடல், திருமாலின் திருக்கோலத்தைச் சொல்லோவியமாகத் தீட்டிக் காட்டுகிறது.

திருமாலின் திருவடிகள் செந்நிறம் (சிலப் 7 முன்னிலை 3) வாய்ந்தன. அவை தாமரை மலரைப் போன்றன. பொற்றாமரை மலரைப் போன்ற பொலிவுஉடையன(சிலப் 11.34) அவருடைய துணை மலர்த் தாள்கள் மனிதரின் பிறவித் துன்பத்தைக் கெடுக்கும் ஆற்றல் வாய்ந்தவை. (சிலப் 11. 137–138.)

திருமாலின் திருவடிகள் மூன்று அரிய செயல்களைச் செய்துள்ளன. ஈரடியால் மூவுலகை அளந்தமை. குருந்த மரத்தை ஒடித்தமை; மாயம் நிறைந்த சகடைத்தை உதைந்தமை, (திரிகடுகம் கடவு.) என்பன அச் செயல்களாகும்.

உவணச் சேவல் (கருடன்) (பரி. 2.60; சிலப். 14.8) அவருடைய கொடி; அச்சேவலே ஊர்தியாகவும் விளங்குகிறது. (ஷ 3.60) அரவணைப் பள்ளியாகக் கொண்டவர் திருமால். (கலி 105.74) சங்க இலக்கியத்துள் கருடன் எனும் பெயரோ, ஆதி சேஷன் எனும் பெயரோ வழங்கப்படவில்லை என்பது கருதத்தக்கது.

திருமாலின் படைக் கருவிகள் ஐந்து. இதனை 'ஐம்படைத்தாலி' எனும் சொல்லாட்சியின் மூலம் அறிகிறோம். சங்கம், சக்கரம், தண்டு (கதை), கட்கம், சாரங்கம் எனும் வில் ஆகிய ஐந்து படைக் கருவிகளின் வடிவில் செய்யப்பட்ட அணிகலன்களை ஒன்றாகக் கோத்து, குழந்தைகளின் கழுத்தில் கட்டும் வழக்கம் இருந்தமை அறியப்படுகிறது. (அகநா. 54; மணி 3:137–138 7:56 –57) தீய சக்திகளிடம் இருந்து குழந்தையைக்காப்பதற்காகக்காத்தல் கடவுளாகிய திருமாலின் ஐந்து படைக் கருவிகளின் மாலையைக் குழந்தைகளுக்கு அணிவித்தார். திருமாலின் சங்கும் (வலம்புரி) சக்கரமாகிய நேமியும் முதன்மையான கருவிகளாகும். (முல்லை 1 சிலப். 11:47 பதிற் 31:8 பரி 13:58 பரி. 2:37–40 15:60; பழமொழி 80:4 பரி 15:59; பரி 13:33) திருமாலின் ஆடை பொன்னிற வடிவுடையது. (பரி 1:9–10; 3:88; 13:1–2: சிலப். 9:50) இத்தகைய திருக்கோலத்தினை உடைய வராகத் திருமால் சங்கப் பாடல்களில் சித்தரிக்கப்படுகிறார்.

(இன்னும் வரும்)



அழகர் கோயில்

# ஆண்டாள் பாடிய ஐந்து

மைதிலி வேணுகோபால்.
சென்னை.



கோகுத்தனைகட்டும், கண்ணனைகட்டும் - கூடாரை வெல்லும் சீரைத்தான் ஆண்டாள் எத்தனை அழகாகப் பாடியிருக்கிருள்? வேதத்தையே சாறுகப் பிழிந்ததுதான் அவள் பாசுரங்கள் என்றுல், அது மிகையாகாது. ஒருசின்னஞ்சிறு பெண்ணுக்கு எப்படி இவ்வளவு ஞானம் வந்தது என்று நினைக்க நினைக்க, ஆச்சரியமாகவே இருக்கிறது. அவள் பாசுரங்களை சிறிது அனுபவிப்போம்.

"ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம்"- என்று சொல்லப்படுவதைத்தான், "மிக்க இறை நிலை" என்று ஆழ்வார் அருளுகிருர். எம்பெருமானின் ஸ்வரூபம் ஐந்து விதமாக இருக்கின்றன. "மம ப்ரகாரா; பஞ்சேதி ப்ராஹுர் வேதாந்த பாரகா: பரோ, வ்யூஹச்ச விபவ்வா, நியந்தா ஸர்வதேஹிநாம், அர்ச்சாவதாரச் ச ததா தயாளு; புருஷாக்ருதி; இதி ஏவம் பஞ்சதா ப்ராஹுர் மாம் வேதாந்த விதோ ஜநா;" என்பர் பெரியோர்.

இவற்றை சிறிது விளக்கமாகப் பார்க்கலாம்.

**பரத்வம் :** எம்பெருமானின் ஐந்து நிலைகளில் முதலாவது, பரத்வம். நித்ய விபூதியிலே நித்யர்க்கும், முக்தர்களுக்கும் பரமபோக்யனுக எழுந்தருளியிருக்கும் அழகைச் சொல்வது. பரமபதத்தைத்தான், "திருநாடு", "நலமந்தம் இல்லதோர் நாடு" "ஸ்ரீ வைஷ்ணவ பதம்" என்பர். இதற்குக் கால பரிணமமே கிடையாது. எங்கும் ஒளி மயமாக இருக்கும் அக்னியும், ஆதித்யனும், இந்த ஜோதிக்கு முன்னே, வெறும் மின்மினிதான். ரஜோ, தமோ குணங்கள் துளியும் தலைகாட்டிடாத, சுத்த ஸத்வ குணமே உருவானது. இதன் ஸௌந்தர்யத்தை யாராலும் வர்ணிக்க இயலாதே! பரமபதத்தைவிட, சிறந்த இடம் வேறெதுவுமே இல்லை. திவ்யமான இடம். இந்த "திவ்யம்" என்கிற வார்த்தை, ஸ்ரீவைஷ்ணவ தத்துவத்துக்கு மட்டுமேஉரியது. பரமபதத்தையும், எம்பெருமானையும், பிராட்டியையும் வர்ணிக்கும்போது மட்டுமே, "திவ்ய" என்பர். எல்லையற்ற பெருமையையுடைய பரமபதத்திலே, திருமாமணி மண்டபத்தே நித்யஸூரிகள், நித்ய கிங்கரர்களாக உள்ள பரம திவ்யமான இடத்திலே எழுந்தருளியிருப்பவனே, ஸ்ரீபரம்பதநாதனுகிய ஸ்ரீமந்நாராயணன். இந்த நிலையைத் தான் பரத்வம் என்கிருேம்.

முதல் திருப்பாவையிலேயே, ஆண்டாள், பரத்வத்தைப் பாடினுள். "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்கிற சொற்ருெடர். அவனது பரத்வத்தை உணர்த்துவதோடின்றி, நம்போல்வார்க்கு நம்பிக்கையையும் நல்குகிறது.

**வ்யூஹம் :** படைத்தல், காத்தல், அழித்தலாகிற ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களை நிர்வகிக்கவும், ஸம்ஸாரிகளுக்கு இஷ்ட பிராப்தியையும், அநிஷ்ட நிவ்ருத்தியையும் செய்து, அவர்களை ரக்ஷிப்பதற்காகவும், முமுக்ஷுக்களாய் உபாஸிக்குமவர்களுக்கு முடிவில் தன்னையே வந்தடையும் அனுக்ரஹத்தை செய்யவேண்டுமே என்கிற கவலை மிகக்கொண்டு, திருப்பாற்கடலிலே, திருவநந்தாழ்வான் மேல் பள்ளி கொண்டிருக்கிற நிலை. 'பாற்கடலில் பையத்துயின்ற பரமன் அடிபாடி" என்று அருளுவது இந்நிலையைத்தான். இந்நிலையில், எம்பெருமானை ஸங்கர்ஷண, ப்ரத்யும்ன, அநிருத்தன் என்பர். எல்லோருடைய குறைகளையும் கேட்டறிந்து, அவற்றை நீக்கும் நிலை.

**விபவம்:** எம்பெருமான் எடுத்த அவதாரங்களை 'விபவம்' என்பார்கள். மத்ஸ்ய, கூர்ம, வராஹாதி தசாவதாரங்களையே 'விபவதாரம்' என்பர். ஆவேசாவதாரமென்றும், ஸாக்ஷாதவ்தாரமென்றும் இருவகைப்படும். இந்த ஆவேசாவதாரத்திலேயே, இரு வகைகள் உண்டு. எம்பெருமான், தன்னுடைய அஸாதாரண ரூபத்தாலே ஆவேசிப்பது ஸ்வரூபாவேசம். இராமன், கண்ணன் போன்று, சேதன சரீரத்திலே, தன் அஸாதாரண விக்ரஹத்தோடு ஆவேசிக்கை இது. காரியம் நடைபெற வேண்டிய காலங்களில் மட்டும், பிரமன் சிவன் போன்ருேரின் சக்தியை மாத்திரம் எடுத்துக் கொண்டு அவதரிப்பது சக்தியாவேசமாகும்.

கீதையிலே அவனே 'ஸம்பவாமி யுகே யுகே' என்று சொன்னபடி, சிஷ்டர்களைக் காக்கவும், துஷ்டர்களை அழிக்கவும், தர்மத்தை நிலைநாட்டவும் எத்துணையோ அவதாரங்கள் எடுக்கிறான். 'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்றும், 'அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த உம்பர் கோமான்' என்றும் 'அன்று இவ்வுலகம் அளந்தாய்' என்று த்ரிவிக்கிரமாவதாரத்தையும், சீரிய சிங்கம் என்று ஸ்ரீநருஸிம்ஹாவதாரத்தையும், 'சினத்தினால் தென்னிலங்கைக் கோமானை செற்ற-'சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்' என்று ஸ்ரீராமவதாரத்தையும், ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தைப் பல படிகளாலும் பாடியிருக்கிறாள்.

அந்தர்யாமி: ஒவ்வொரு ஜீவனுக்குள்ளும் பிரவேசித்து, ஸகல ப்ரவ்ருத்தி, நிவ்ருத்திகளுக்கும் நியந்தாவாக இருக்கிறபடி. 'உள்ளத்துக் கொண்டு' என்று ஆண்டாள் அருளியது, அந்தர்யாமியைக் குறிப்பிடுகின்றது. ஒவ்வொரு ஜீவனுக்குள்ளும் பிரவேசித்தால், அந்த ஜீவனின் தோஷங்களும் எம்பெருமானையே சேர்ந்து விடுமே, அது அவனுக்கு இழுக்கல்லவா என்று தோன்றலாம். ஜீவனுக்குள்ளே புகுந்தாலும், அதனுடன் ஒட்டாது, தன்னுடைய தனித் தன்மையை விடாதிருப்பதும், அதனுடன் கலக்காதிருப்பதுமே அவனது தனித்தன்மையாகும். நாச்சியார் திருமொழி-(11-6)யில் ஆண்டாள் பாடுகிறாள்.

"கைப்பொருள்கள் முன்னமே கைக்
கொண்டார் காவிரிநீர்
செய்ப்புரளவோடும் திருவரங்கச்
செல்வனார்
எப்பொருட்கும் நினறார்க்கும் எய்
தாது நான்மறையின்
சொற்பொருளாய் நின்றார் என்
மெய்ப்பொருளும் கொண்டாரே"

'எப்பொருட்கும் நின்று' என்கிற சொற்தொடர், அந்தர்யாமியைக் குறிக்கிறது.

அர்ச்சை: கடைசியாக அர்ச்சையைப் பற்றிச் சொன்னாலும், அர்ச்சையின் பெருமை எல்லையேயில்லாதது. 'புள்ளரையன் கோயிலில்' என்று ஆண்டாள் அருளுவது, எண்ணற்ற அர்ச்சாமூர்த்திகளைத்தான். 'அர்ச்சா பூஜா ப்ரதிமயோ:' என்னும் சொல்படி, ப்ரதிமையைப் பூஜித்தல் என்று பொருள்படும். நம்மைப் போன்ற ஸம்ஸாரிகளிடம் வந்து, முதல் நான்கு நிலைகளைப்பற்றி எத்தனைதான் எடுத்துச் சொன்னாலும் எடுபடாது என்பதைப் புரிந்து கொண்ட ஆழ்வார்கள் அத்தனை பேருமே, அர்ச்சையிலே விசேஷமாய் மனத்தைப்பறி கொடுத்துப் பாடினார்கள். தமர், அதாவது பக்தன் உகந்த உருவத்தையும், பக்தன் உகந்த நாமத்தையும் விருப்புடன் ஏற்று, அவர்கள் பாடுகின்ற குணங்களையும், சேஷ்டிதங்களையும் மதிப்புக் கொடுத்து ஏற்று, அவ்வண்ணமே அருள்புரிவது அர்ச்சையின் விசேஷம். பரத்வம், வ்யூஹம் போன்றவை நமக்கு எட்டாதவை. அவற்றைப் புரிந்து கொள்ள ஞான, பக்தி, வைராக்யங்கள் வேண்டும். அப்படியில்லாமல், அர்ச்சையை நாம் புறக்கண்களாலே காண முடிவதால், நமக்கு ஏற்றது அர்ச்சையே.

திருவரங்கத்திலே பிள்ளைகள் மண்ணிலே விளையாடிக் கொண்டிருக்கையிலே, எம்பெருமானார் பிக்ஷைக்காக எழுந்தருளினார். குழந்தைகள் விளையாட்டாக, குச்சியால் மனம் போனபடி மண்ணிலே வரைந்து, 'உடையவரே! பெருமாளைப் பாருங்கள்' என்ற போது, உடையவர், குழந்தைகளின் பக்தியைக் கண்டு சிலிர்த்து, 'தமர் உகந்தது எவ்வுருவம்' என்கிற பாசுரத்தைப் பாடிக் கொண்டே, உடனே தண்டனிட்டார்.

மற்றொரு சமயம், குழந்தைகள் இதைப் போன்றே மண்ணிலே வரைந்து விளையாடும்போது, பிரஸாதமாக மண்ணையே எம்பெருமானுக்கு கண்டருளப் பண்ணிவிட்டு, உடையவருக்கும் அதையே இட வந்த போது, எம்பெருமானாரும் அதையே ஏற்றார்.

நம் போன்ற குருடர்களுக்கென்றே ஏற்பட்டது, அர்ச்சை நிலை. 'பின்னானார் வணங்கும் சோதி' என்று திருமங்கையார் அருளியபடி, நாமெல்லோரும் பரத்வம், வியூஹம், விபவம், அந்தர்யாமிகளில் அந்வயிக்கக் கொடுத்து வைக்காதவர்கள். தாகம் தாகம் என்று தவிப்பவனுக்கு உடனே கிடைக்கின்ற நீரைப் போல, நமக்கு அர்ச்சாவதாரம் உடனே, வேண்டுவதைக் கொடுக்கும். தீயவழிகளிலே செல்கின்ற ஸம்ஸாரிகளை, நல்வழிப் படுத்துவது அர்ச்சாவதாரமேயாகும்.

அற்ப பலன்களான பரிக்ஷையில் தேறுவது, தகுந்த துணை கிடைப்பது, மக்கட் செல்வம், பொருள் போன்றவற்றைக் கேளாது, அவனுடைய பாதாரவிந்தங்களுக்குக் கைங்கர்யம் செய்யும் பேறுகிய 'பறை' வேண்டுமெனினும், கொடுக்கக் கூடியது அர்ச்சையே. அதனால், ஆண்டாளின் வாக்குப்படியே 'பறை' தான் வேண்டும் என்கிற உறுதியிலிருந்து சற்றும் பிறழாது, ஸ்ரீமந் நாராயணனை ஆராதிப்போம்.

அந்தர்யாமியாக எம்பெருமானை இருத்திக் கொண்ட ப்ரஹ்லாதனைப் போல இருக்க, கடினமாக முயற்சி செய்து, வெற்றியடைய பாடுபடுவோம். நூற்றியெட்டுத்திருப்பதிகளையும் ஸேவித்து, அந்தந்த அர்ச்சா மூர்த்திகளில் ஈடுபட்டு, அவற்றின் பாசுரங்களை ஆடியாடி அகம் கரைந்து இசையுடன் பாடிப்பாடி கண்ணீர் மல்க பிரார்த்திப்போம். 'பறை' பெறுவதே, ஒவ்வொரு ஸ்ரீ வைஷ்ணவரின் லக்ஷ்யமாகும். அதற்காகவே மட்டும் அவனை பிரார்த்திப்போம்.





கொண்டு பணிசெய்கையில், திருத் துழாய்ச்செடியின் (துளசிச்செடியின்) கீழ் அவதரித்தாள் ஆண்டாள்.

பதப்படுத்திய நிலத்தில், சுக்லபட்சம், ஆடிமாதம், செவ்வாய்க்கிழமை, பூர நட்சத்திரத்தில் அவதரித்து நம்மையெல்லாம் பதப்படுத்த வந்தாள் சூடிக்கொடுத்த நங்கை. வறியவன் ஒருவன் பெருநிதியைக் கண்டால் அவன் மனம் எவ்வாறு ஆனந்தப்படுமோ, அதுபோல பெரியாழ்வார் மண்ணில் அவதரித்த குணக்குன்றுக்குக் கோதை என்னும் பெயர் சூட்டி, பஞ்ச ஸமஸ்காரங்களைச் செய்து, பக்தி மார்க்கத்தை ஊட்டி, வளர்த்து வந்தார்.

தன் தாய், தந்தை, உற்றார், உறவினர், ஊரார் வியக்க கோதை வளர்ந்து வந்தாள். அவளுடன் இளமைப் பருவத்திலிருந்தே தெய்

ஒரு நாள் வெளியில் சென்றிருந்த பெரியாழ்வார் திரும்பி வரும்போது ஆண்டாள் செய்யும் இக்காரியத்தைப் பார்த்து மிகவும் வருத்தமடைந்து, தன்மகளை கண்டித்ததுடன் அன்று கோவிலுக்கு மாலை சாற்றச் செல்லவில்லை. அந்நாள் பகவான் அவருடைய கனவில் தோன்றி 'ஏன் இன்று மாலை எடுத்து வரவில்லை?' என்று வினவ, பெரியாழ்வாரோ மிக வருத்தத்துடன், தன் மகள் செய்த வேலையைக் கூறி, 'அறியாமல் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டும்' என்று கூறிப் பணிந்தார்.

அப்போது அரங்கநாதன் பெரியாழ்வாரை நோக்கி, 'அம்மலரே எனக்கு நறுமணமுள்ள மலர். எனவே நீர் இனி கோதை சூடிய மாலையையே எனக்கு எடுத்து வாரும்' என்று கூறி மறைந்தார். நித்திரை விழித்த ஆழ்வார், கோதையை மலர் மங்கையாக

# மார்கழி மாத ஆண்டாள் வைபவம்

அன்னவயற் புதுவை ஆண்டாள்
அரங்கற்குப்
பன்னு திருப்பாவைப்பல் பதியம்...
இன்னிசையால்
பாடிக்கொடுத்தாளே நற்பாமாலை பூமாலை
சூடிக் கொடுத் தாளைச் சொல்லு"

முன்பு திரேதாயுகத்தில் மிதிலா பட்டினத்தில் ஜனக மகாராஜன் யாக சாலை கட்டும் பொருட்டு நிலத்தை ஏர் கொண்டு உழும் சமயம் ஸ்ரீமகாலட்சுமியின் அவதாரமான ஒரு பெண் குழந்தைக் கிடைத்தது. அதை எடுத்துச் சென்று ஜனக ராஜன் சீதை எனப் பெயரிட்டு வளர்த்து வந்தான்.

அதுபோல பின்பு கலியுகத்தில் பாண்டிய நாட்டில் ஸ்ரீ வில்லிபுத்தூர் என்னும் ஊரில் பெரியாழ்வார், தன்னுடைய நந்தவனத்தில் உள்ள களைகளை அகற்ற களைக்கருவிகளைக்

வீக அறிவும், பகவானிடம் பக்தியும் வளர்ந்து வந்தது.

கன்னி பருவத்தையடைந்த கோதை சகல சௌபாக்கிய நாயகியாகத் திகழ்ந்தாள். வட பெரும் கோயில் அரங்கனை மனதில் கொண்டாள். 'மானிடர்க்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன்' என உறுதி மொழி எடுத்துக் கொண்டாள். தினமும் வடபெரும் கோயிலையுடைய அரங்கநாதனுக்கு நம்மாழ்வார் பூமாலை கோர்த்து, சமர்ப்பிப்பது வழக்கம். அந்த பூமாலையை தினந்தோறும் அணிந்து, 'என் மனதிலுள்ள அரங்கனுக்கு நான் இணையாக இருக்கிறேனு' எனப்பார்ப்பது ஆண்டாளின் வழக்கமாக இருந்தது. இவ்வாறு மலர் மாலையை யாரும் பார்க்காதவாறு அணிந்து பின் களைந்து அனுப்பும் மாலையை பகவான் மிக விரும்பி ஏற்றுக் கொண்டார்.

எண்ணி, அனைத்து உலகுக்கும் அன்னையானவளை ஆண்டாள் என்றும், மாதவனுக்கு உரிய மலர் மாலையை தான் சூடிப்பின்பு தந்ததால் சூடிக் கொடுத்த சுடர்க் கொடி என்றும் திருப்பெயரிட்டு அழைத்து வந்தார்.

இவ்வாறிருக்க ஆண்டாள், தன், கணவனாக வரித்துவிட்ட இறைவனை நோக்கி,

திருமதி. வைதேஹி நரசிம்மன்.
திருமுல்லைவாயில்.

" சங்கமா கடல் கடைந்தான் தண் முகில்
காள் வேங்கடத்துச்
செங்கண்மால்.........என்னுவிதங்கு
மென்றுரையீரே"

என்று பாடினாள்.

கோதைக்குத் திருமணவயது வந்துவிட்டதால், இவளுக்கு ஏற்ற கணவனை எவ்வாறு கண்டு பிடிப்பது என

## சந்தாதாரர்களுக்கு....

31-1-89—ஆம்தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆங்கிலத்தில் 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

*12 39 79 80 81 129 143 153 161 163 205 264 277 361 426 444 448 449 454 463 464 468 481 482 486 487 488 489 493 494 624 626 627 628 629 630 964 964A 970 978 996 997 1003 1009 1012 1017 1025 1035 1044 1045 1051 1053 1061 1062 1065 1085 1089 1095 1102 1106 1110 1119 1127 1134 1138 2384 2385 2386 2387 2391 2394 2408 2414 2415 2419 2420 2422 2426 2427 2428 2432 2433 2435 2437 2438 2439 2440 2448 2450 2451 2453 2457 முதல் 2463 2467 2468 2469 2473 2476 2481 2482 2485 முதல் 2492 2495 2497 2498 2500 2502 2503 2505 2511 2512 2513 2515 2516 2527 2532 2533 2537 2538 2540 2545 2549 2554 முதல் 2557 2562 2565 3659 முதல் 3700 3702 முதல் 3709 3711 முதல் 3719 3722 முதல் 3732 3734 3736 முதல் 3739 3741 முதல் 3749 3752 முதல் 3781*

வேதனையுடன் பெரியாழ்வார்கோதையை அருகில் அழைத்து, 'அம்மா நீஎப்படிப்பட்ட கணவனை வரிக்க விரும்புகிறாய்?' என்று கேட்டார். கோதையும், 'நான் மானிடர் எவர்க்கும் வாழ்க்கைப்பட விரும்பவில்லை. அரங்கநாதனையே என் மனதில் வரித்துள்ளேன்' எனக் கூறக் கேட்டு பெரியாழ்வார் மிகவும் பதறி, வேதனையுற்றவரானார்.

நூற்றெட்டுத் திருப்பதிகளில் மிகவும், பழைமையானதும், உயர்வுற்றதுமான திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமான், பெரிய பெருமாள் திருவரங்கன் என்னும் பெயருடையவனும், ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பட்டவனும், ஏழு அரண்களுக்கு அரசனாக வீற்றிருப்பவனும், எவர் மனதிலும் உறைபவனும், அழகானவனுமான திருவரங்கனை மனக்கண்ணால் நினைத்து தன் தந்தைக்கு தெரிவிக்க,

"தீமுகத்து நாகணைமேல் சேரும்
திருவரங்கர்
ஆமுகத்தை நோக்காரால் அம்மனே
அம்மனே"

என்று பாடினாள்.

தான் கனவிலும், நனவிலும் அழைத்தும் வாராத கோவிந்தனை நோக்கி, மார்கழி மாத விடியற்காலை நேரத்தில் நோன்பு நோற்க ஆரம்பித்தாள். தன் தோழியருடன் சேர்ந்து கடும் விரதம் மேற்கொண்டாள். 'வையத்து வாழ்வீர்காள்......உகந்தேலோ ரெம்பாவாய்' என முப்பது பாடல்களைப் பாடியருளினாள்.

பெரியாழ்வார், தம் மகளுக்கு விவாகம் செய்து வைக்க இயலவில்லையே என வேதனையடைந்தார். அப்போது அவர் கனவில் திருவரங்கன் தோன்றி 'உமது மகளை என் சன்னதிக்கு அழைத்து வாரும். நான் ஏற்றுக் கொள்கிறேன்' என்று கூறினான்.

அதே இரவில் ஆண்டாள், மங்கள மேளங்கள் ஒலிக்க, நாளை மணநாள் என நிச்சயித்து, பட்டுடுத்தி, மாலையணிந்து, மதுசூதனின் கைப்பற்றி, தீவலம் வந்து, அம்மி மிதித்து, தன் கல்யாண வைபவத்தைக் கனவாகக் கண்டாள். அதை கவிதையாகவும் எழுதினாள்.

அதே சமயம் பகவான், தன் கோயில் சிப்பந்திகளிடம் கனவில் தோன்றி 'நீங்கள் சகல மங்கள வாத்யங்களுடனும், நவரத்ன பல்லக்கை எடுத்துச் சென்று ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் சென்று ஆண்டாளை அழைத்து வாருங்கள்' என நியமித்தார்.

ஊர் முழுவதும் கோலமிட்டு, பந்தலிட்டு அலங்கரித்தனர். பல்லக்கில் ஆண்டாளை அமர்த்திக் கொண்டு, திருவரங்கம் வந்து சேர்ந்தனர். திருவரங்கன் சந்நிதியை அடைந்த ஆண்டாள், திருவரங்கனின் அழகில் லயித்து, ஆனந்தக் கடலில் மூழ்கி நம்பெருமானின் திருமேனியில் அந்தர்ப்பவித்து அவனை என்றுமே பிரியாதவளானாள்.

திருவரங்கன் நம்மாழ்வாரை அழைத்து, 'நீர் எனக்கு மாமனாகி விட்டீர். இன்று முதல் எனது சந்நதியிலேயே, எனக்கு தொண்டு புரியும்' என்று அநுக்ரஹித்தார்.

பெரியாழ்வார் ஆனந்தக் கண்ணீருடன்,

"ஒரு மகள் தன்னையுடையேன் உலகம்
நிறைந்த புகழால்
திருமகள் போல் வளர்த்தேன், செங்
கண்மால் கொண்டு போனான்"

என்று பாடினார்.

துளசிச் செடியின்கீழ் அவதரித்த திருமகளின் அம்சமான ஆண்டாள் தான் விரும்பி கணவனை அடைந்து மகிழ்ந்தாள்.

திருவாடிப் பூரத்து செகத்துதித்தாள்
வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினாள்
வாழியே,

என வாழ்த்தி நாமும் மார்கழி நோன்பிருந்து பகவானிடமிருந்து வேண்டியதைப் பெறுவோமாக!



Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba Rao, M.A. and Printed at T. T. D. Press by M. Vijayakumar Reddy Manager, T. T. D. Press, Tirupati-517501.

